
‘‘பிள்ளையாரப்பா! அத்திம்
பேர் பட்டாசு வாங்கிண்டு
வராததைக் கூட மன்னிச்சுட
லாம். ஆனா அவர் என்கிட்ட
இருக்கிற பட்டாசுக்கு
பங்குக்கு வராமலிருந்தாலே
போதும். தேங்காய் உடைக்
கிறேன்!’’

# 1 ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு





போன வாரம் நானும் என் நண்பனும் பார்க் ஷெர்ட்டனில் ஒரு காக்டெயில் பார்ட்டி கொண்டாடினோம். போதை உச்சத்தில் எங்களிருவருக்கும் சூடான வாக்குவாதம். என் கதைகளில் காணப்படும் புத்திசாலித்தனம் என்னிடமில்லை என்றான். உண்டு என்றேன். நிரூபிக்க ஒரு பந்தயத்துக்குத் தயாரா? என்றான். தயார் தயார்! என்றேன். எந்தவித சாட்சியும் விடாமல் பெர்பெக்டா ஒரு கொலை செய்து புகைப்படம் காட்டு. ஐந்து லட்சம் தருகிறேன் - என்றான். கொலை யாரை? என்றேன். யாரை வேண்டுமானாலும். அவகாசம் பதினைந்தே நாட்கள் - என்றான். சம்மதித்தேன்.

பொய்ப் பெயர் வைத்துக் கொண்டு, பாங்கில் பணிபுரியும் திவ்யாவுக்கு காதல் வலைவீசினேன். இரு நாட்களில் சிக்கினாள். அவளைச் சந்திக்கும் போதெல்லாம் ஒப்பனை முகத்தில் இருந்தேன். என் கார் போகஸ் நம்பர் சுமந்தது. அவள் ஒரு தனி வீடு எடுத்துத் தங்கியிருந்தாள். இரவு சந்திக்க வரட்டுமா? என்றேன். கனவுகளுடன் சரி என்றாள்.

கொலைக்கான ஆயத்தத்தில் ஈடுபட்டேன். கிளினிக் கையுறைகள் ஒரு ஜோடி. இரண்டடி நீளமுள்ள நைலான் கயிறு, பிளாஸ்திரி, நிக்கான் கேமிரா இதர இதர எடுத்து வைத்தேன். யோசித்தேன். நான் கொலை செய்தால் மாட்டிக் கொள்ளக் கூடிய என் பலவீனம் எது? என் உலக பிரசித்தி பெற்ற மறதிதான். சிறப்பாகக் கொலை செய்து விட்டு ஏதேனும் ஒரு அறிகுறியை மறதியில் விட்டு விட்டு வந்து விட்டால்? யோசித்தேன்.

ஒரு பேப்பர் எடுத்தேன். கொலைக்குக் கொண்டு செல்லும் பொருட்களை வரிசையாய்க் குறித்தேன். கொலை முடித்துத் திரும்பும் போது கொண்டு சென்ற பொருட்களைச் சரி பார்த்து 'டிக்' செய்ய வேண்டும்.

காம்பவுண்ட் சுவர் ஏறிக் குதித்து மாடியேறினேன். நைட்டியில் திவ்யா வரவேற்றாள். ஒரு விளையாட்டு என்றேன். சம்மதித்தாள். அவளைக் கட்டிலில் படுக்க வைத்துக் கை கால்களை நான்கு முனைகளில் கட்டினேன். வாயில் பிளாஸ்திரி ஒட்டினேன். ஆட்டோ போகஸில் கேமிராவை பிக்ஸ் செய்தேன். விபரீதம் புரிந்து திவ்யா பதறும் முன் நைலான் கயிற்றால் அவள் கழுத்தில்... 'கிளிக்!' அவள் மரணத்தின் மைக்ரோ நொடியை கேமிரா விழுங்கியது.

எழுந்தேன். கட்டுகளை விடுவித்தேன். பிளாஸ்திரி உரித்தேன். தூக்க நிலையில் பிரேதத்தை கிடத்தினேன். கொண்டு சென்ற பொருட்களைச் சரிபார்த்து 'டிக்' செய்தேன். பேப்பரை ஜீன்ஸ் பாக்கெட்டுக்குள் திணித்துக் கொண்டேன். பேப்பர் பத்திரமாக இருக்கிறதா என தட்டிப் பார்த்து ஊர்ஜிதம் செய்து கொண்டு புறப்பட்டேன்.

விடியற்காலையில் கதவு பேய்த்தனமாய் இடிபட்டது. திறந்தால் இன்ஸ்பெக்டர்! "என்ன?" - என்றேன். 'திவ்யா என்ற பெண்ணைக் கொன்றதற்குக் கைது!' - என்றார். "அத்தாட்சி?" என நக்கலாய்ச் சிரித்தேன்.

"அத்தாட்சி! ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு... ஆனா பக்கா!" - என்றார் கிழிந்த பாதி சீட்டை நீட்டி. பேன்ட் பாக்கெட்டில் திணிக்கும் போது கிழிந்து பாதி விழுந்திருக்கிறது.

"போன வாரம் உங்களின் ஒரு கதையை 'நிலா' பத்திரிகை உங்கள் கையெழுத்திலேயே பிரசுரம் பண்ணியிருந்தார்கள். இரண்டையும் ஒப்பிட்டு எங்கள் கையெழுத்து நிபுணர்கள் கன்பர்ம் செய்தார்கள்!" என்றார் உற்சாகமாய்.

தலைதொங்கக் கைவிலங்கிடப்பட்டு நடந்தேன்.

— ஆர்னிகா நாசர்

# 2-ம் பட்சம்



மகாலிங்கம் மந்திரியானது ஒரு மஹா கதை.

தொகுதியில் செல்வாக்கு உள்ள மகாலிங்கம் அனைத்து அரசியல் கட்சியையும் முட்டிப் பார்த்து - செலவு செய்ய வசதி இல்லாதவர் என்பதால், எந்தக் கட்சியும் சீட்டுக் கொடுக்க முன்வராததால் சுயேட்சையாக நின்று வென்று எப்படியும் சட்டசபைக்குள் நுழைந்து விட வேண்டும் என்பதில் தீவிரமாய் இருந்தார்.

தேர்தலில் போட்டியிட ஆசை இருந்ததே தவிர... டெபாசிட் கட்டுவதற்குக் கூட அப்போது அவரிடம் பணம் இல்லை. மகனின் ஆசையை பூர்த்தி செய்ய, அவரது அம்மா தனது தாலிக் கொடியை அடமானம் வைத்துப் பணம் தர... மகாலிங்கம் தேர்தல் களத்தில் குதித்தார்.

நடந்தே தொகுதியைச் சுற்றி வந்தார். தொகுதி மக்களுக்கு முன்பே நல்ல அறிமுகம் இருந்தததினாலும் அரசியல் கட்சிகள் அமைத்திருந்த கூட்டணி அவர் மகனின் பாட்டனி பாடம் போல் குழப்பமாக இருந்தாலும் மகாலிங்கம் சுலபமாய் வென்றார்.

மெஜாரிட்டி இல்லாமல் தொங்கிக் கொண்டிருந்த அரசு, மகாலிங்கத்தின் ஆதரவைப் பெறுவதற்காக அவருக்கு அமைச்சர் பதவியையும் கொடுத்துத் தொலைக்க... மகாலிங்கம் மாண்புமிகு ஆனார்.

சந்திக்க வேண்டியவர்களையெல்லாம் சந்தித்து... கவனிக்க வேண்டிய ஃபைல்களையெல்லாம் கவனித்து முடித்த போது, அவரது பிரைவேட் டெலிஃபோன் ஒலித்தது. பி.ஏ. பணிவாய் ரீசிவரை எடுத்துக் காதுக்குக் கொடுத்தார். உடன் ரீசிவரை படபடப்பாய் அவரிடம் நீட்டினார்.

மறுமுனை, சொந்த கிராமத்தில் அவரது தாய் கடைசி கட்டத்தில் இருப்பதை நாசூக்காய்க் கூறியது. படபடப்பாய் ரிசிவரை வைத்து விட்டு எழுந்து பி.ஏ. பின்தொடர வீட்டுக்கு வந்து, மனைவியை அழைத்துக் கொண்டு கிராமத்துக்கு அவசரமாய்க் கிளம்பிய போது... டெலிஃபோன் ஒலித்தது.

பி.ஏ. எடுத்துப் பேசினார். "முடியாதுங்க. ஐயாவோட அம்மா ரொம்ப உடம்பு முடியாம இருக்காங்க. கிராமத்துக்குப் புறப்பட்டுக்கிட்டு இருக்காரு. நீங்க நாளைக்கு வாங்க. சொன்னா கேளுங்க..." என்று ரிசிவரை வைத்தார்.

"யாருய்யா...?"

"ஐயா... ஹோட்டல் உரிமையாளர்கள் சங்கத்துலேந்து பேசறாங்க. போன வாரமே உங்ககிட்ட நேரம் கேட்டிருந்தாங்க. நீங்க தான் ஊருல இல்லையே... புதுசா வரி போடப் போறதா சொல்லியிருந்தீங்கல்ல. அதான் நாளைக்கு வரச் சொல்லிட்டேன்..." என்றார்.

மகாலிங்கம் அவரை முறைத்தார்.

"ஏன்யா நாளைக்கு வரச் சொன்ன... நான் திரும்பி வர இன்னும் எத்தினி நாளாகுமோ...? உடனே வரச் சொல்லுய்யா... நான் காத்திருக்கேன்னு சொல்லு..." என்றவர் தயாராய் நின்ற மனைவியைப் பார்க்க... அவள் கையிலிருந்த சூட்கேஸை அவசரமாய் எடுத்துக் கொண்டு உள்ளே செல்ல...

அமைச்சர் மகாலிங்கம் எதிரே சுவரில் மாட்டியிருந்த அம்மாவின் பெரிய சைஸ் படத்திற்கு மானசீகமாய் மாலை அணிவித்து விட்டு, சூட்கேஸுக்காகக் காத்திருக்கத் தொடங்கினார்.

— திருவாரூர் பாபு



# ஜவுளிக் கடல்: மக்கள் வெள்ளம்!

**இந்த ஆண்டு தீபாவளி ஷாப்பிங் எப்படி இருக்கிறது? ஜவுளிக் கடைகள் நிறைந்த திருச்சி என்.எஸ்.சி. போஸ் ரோடில் (உண்மையில்) மக்கள் வெள்ளத்தில் நீந்தி வந்த போது...**

படு உற்சாகமாகச் சென்று கொண்டிருந்த ஒரு புது மண ஜோடியை முதலில் பின்தொடர்ந்தோம். இரண்டு கடைகளிலுள்ள சேலைகளையெல்லாம் தலைகீழாகப் புரட்டியெடுத்தும் அந்தப் பெண்ணின் முகத்தில் ஒரு சந்தோஷம் தென்படவில்லை.

மூன்றாவது கடைக்குப் புறப்பட்ட போது, அந்தப் புது மாப்பிள்ளைக்குப் பொறுமையிருந்தாலும் நமக்கு இருக்கவில்லை. உள்ளே நுழைந்தோம். சில பேர் தங்கள் மனசுக்குப் பிடித்த டிசைன்களையெல்லாம் சுட்டிக்காட்டி எடுத்துப் போடச் சொல்லிக் கொண்டிருந்தாலும் சிலர் அப்படியில்லை.

"ஐநூறு ரூபாய்க்குள்ளே அடங்கற மாதிரி எடுத்துப் போடுங்க, பார்ப்போம்..." என்று தங்கள் பட்ஜெட்டை முன்கூட்டியே சொல்லிக் கேட்கவும் செய்தார்கள்.

"இருக்குங்களே... தோ பாருங்க... சான் சில்க், ரப்பர் சில்க், பட்டர் சில்க், மைக்ரோ கட்... எல்லாமே 300 ரூபாயிலிருந்து எழுநூறுக்குள்ளதான்... எல்லாமே புதிதாக வந்துள்ள சிந்தடிக் ரகங்கள். பாருங்க..." என்றனர் கடைச் சிப்பந்திகள்.

"சாப்ட்டா வேணும்னா பட்டர் சில்க், ரப்பர் சில்க் எடுத்துக்குங்க. 'கொஞ்சம் கனமா இருக்கலாம்னா சான்சில்க் பாருங்க.." என்றார் அங்கு வந்த ஆனந்தா சில்க்ஸ் பாரடைஸின் அதிபர் சந்திரசேகர்.

"அந்த டிசைன் நல்லாருக்கே.."

"அது அறுநூத்தம்பது ரூபாய் ஆகும்மா.."

"என்னங்க... (கணவரைப் பார்த்து) பேண்ட்-சட்டை வாங்கினது போதாதுன்னு



"ஹலோ! மிஸஸ்...."

"...சுகந்தி சம்பத்! என்ன வேண்டும் உங்களுக்கு?"

நம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு, "ஒரு புடைவை வாங்க இத்தனை சிரமமும் அலைச்சலும் தேவைதானா?" என்றோம்.

"என்ன தப்பு? எங்களுக்கு இந்த வருஷம் தலைதீபாவளி. அதற்கு மனசுக்குப் பிடித்த ஒரு சேலை வாங்க வேண்டாமா? எனக்கோ (கணவரைச் சுட்டிக்காட்டி) இவருக்கோ புடைவைகளைப் பற்றியோ அவற்றின் தரம் பற்றியோ எதும் தெரியாது. நாலு கடைகளில் நுழைந்து பார்த்தால்தானே இந்த வருஷம் புது டிசைன் என்ன வந்திருக்கு.. விலை எப்படி... என்கிற விவரமெல்லாம் தெரியும்!" என்றார் நறுக்கென்று.

இதற்குள் அடுத்த துணிக் கடை வந்து விட நாமும்

இந்த வருஷம் வேஷ்டியும் வாங்கணும்னு ஏன் ஒத்தக் கால்ல நிக்கறீங்க. ஆபீஸுக்கு வேஷ்டி கட்டிக்கிட்டா போகப் போறீங்க.. வேண்டாங்க... வேஷ்டி வாங்கற பணத்தையும் சேர்த்தா இந்த புடைவையை வாங்கிக்கலாங்க... பிளீஸ்...'' என்று மனைவி கெ(ா)ஞ்சலாகக் கேட்கிற போது வேறு வழியின்றி தலைதீபாவளி வேஷ்டியைத் தியாகம் செய்யும் ஒரு கணவனையும் நம்மால் பார்க்க முடிந்தது.



இந்த ஆண்டின் புதிய டிசைன்கள் என்னென்ன? இந்தக் கேள்வியை லக்ஷ்மி சில்க்ஸ் அதிபர்களில் மூத்தவரான சுந்தர ராஜுலுவிடம் கேட்ட போது, "ஸ்டெயின் கார்டு ரகப் பட்டுச் சேலைகள்!'' என்றார்.

அதில் என்ன விசேஷம்?

"காப்பி, டீ, எண்ணெய்க் கறைகளிலிருந்தெல்லாம் பாதுகாப்பளிக்கிறது இந்த ரகம். விலையும் 1500 ரூபாய் முதல் 2500 வரை தான்!'' என்றார்.

'சாஃப்ட் சில்க்' என்று பிரிண்டட் டிசைனில் 800 ரூபாய் விலையில் வந்திருக்கும் புடைவைகள் நிறைய விற்பனையாவதாகவும் சொன்னார்.

"எங்களைப் பொருத்தவரை 'அபூர்வா' பட்டுச் சேலைகள்தான் இந்த வருடம் ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருக்கிறது. காஞ்சிபுரம் போலவே கண்ணைப் பறிக்கும் டிசைன்கள் கொண்ட இதன் விலை 2000 முதல் 3000 ரூபாய் வரைதான்!'' என்றார், நல்லி சில்க்ஸின் மானேஜர் பாண்டியன்.

இது தவிர ஃபேன்சி டிசைனில், பிரிண்டட் சில்க் வகையைச் சேர்ந்த 'நக்மா' வகை (விலை ரூ 900)யும் அதிகம் விற்பனையாவதாகச் சொன்னார் பாண்டியன்.

இவரிடம், "புதிய டிசைன்களை அறிமுகப்படுத்துவதில் சென்னைக்கும் திருச்சிக்கும் வித்தியாசம் இருக்கிறதா?'' என்றோம்.

"நிச்சயம் உண்டு. கலவையான நாகரிகம் உள்ள நகரம் சென்னை. அதனால் எந்த டிசைனாக இருந்தாலும் விற்பனையாகும் விலை பற்றியும் அவ்வளவாக யோசிப்பதில்லை. ஆனால் திருச்சியில் அப்படியில்லை. இங்கு லோயர் மிடில் கிளாஸ் குடும்பங்கள் அதிகம் என்பதால், அவர்களுக்குக் கட்டுபடியாகிற விலையிலிருக்கும் டிசைன்களாக இருக்க வேண்டியது அவசியம்!'' என்றார்.

திருச்சி, கிராமங்கள் சூழ்ந்த நகரம் என்பதால், சுற்று வட்டாரக் கிராமங்களிலுள்ளவர்களின் ரசனை எப்படி?

"அதெல்லாம் மாறிடுச்சுங்க. இன்னைய தேதிக்கான லேட்டஸ்ட் டிசைனெல்லாம் கிராமத்திலும் அத்துபடி!'' என்றார் வாளாடி கிராமத்தைச் சேர்ந்த திருமதி லக்ஷ்மி.

கடைக்காரர்களிடம் விசாரித்த போதும், "அவங்க சொல்றது சரிதான். ஆனாலும் பொருளாதார ரீதியில் பார்த்தால், கிராமத்தைச்



சேர்ந்தவர்களால், நகரத்திலுள்ளவர்களோடு போட்டி போட முடியாது. அதனால் குறைந்த விலையில்தான் பார்க்கிறார்கள். பெரும்பாலான கிராம மக்கள் பார்வைக்குப் பளிச்சென்றிருக்கும் 'பிரைட் கலர்' துணிகளையே அதிகம் விரும்புகிறார்கள்!'' என்றனர்.

**பு**டைவை விஷயம் இப்படியென்றால் மாடர்ன் டிரெஸ் விஷயம் எப்படி? இளம்பெண்கள் எதை விரும்புகிறார்கள்?

கடந்த 89-லிருந்தே திருச்சியில் சூரிதார் புயல் தாக்க ஆரம்பித்து விட்டாலும் இங்குள்ள எஸ்.ஆர்.சி. பெண்கள் கலைக் கல்லூரி மாணவிகளைக் கேட்டால், முதலில் ஏக்கப் பெருமூச்சுத்தான் வெளிப்படுகிறது. காரணம், பாவாடை - தாவணி அல்லது புடைவை அணிந்துதான் கல்லூரிக்கு வர வேண்டும் என்கிற விதி! ஆயினும் கல்லூரிக்கு வெளியில் பிரச்னையில்லை என்பதால் புயலின் வேகம் இவர்களையும் விட்டு வைக்கவில்லை.

இதன் காரணத்தால் 'ஈ.வி. கலெக்ஷன்ஸ்' என்கிற பெயரில் தங்கள் சொந்த டிசைனில் சூரிதார் ரகங்களை இந்த ஆண்டு அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள் ஆனந்தா ரெடிமேட் ஷோரூம்காரர்கள். ஸ்பன் சிந்தடிக் ரகம் ரூ 175 முதல் 500 வரை. பட்டு என்றால் ஆயிரம் முதல் ஐயாயிரம் வரை!

தீபாவளி டிரெஸ்ஸாக வயலட் நிற சூரிதார் ஒன்றை வாங்கிக் கொண்டு வெளியில் வந்த ஹோலிகிராஸ் கல்லூரி மாணவியான மதுவை மடக்கினோம்.

''சூரிதாரில் இருக்கும் வசதி சேலையில் கிடையாது. பஸ்ஸிலோ டூ வீலரிலோ பயணம் செய்யும் வசதியை விடுங்கள்... கல்யாணம் போன்ற விசேஷங்களுக்குச் செல்லும் போது, சூரிதார் என்றால் 200 ரூபாய் மதிப்புள்ளதாக இருந்தாலும் மதிப்புத்தான். ஆனால் புடைவை அப்படியில்லை. பட்டுக்குத்தான் மரியாதை; அதுவும் ஜரிகையின் அளவைப் பொறுத்து மாறுபடும்!'' என்றார்.

''**எ**னக்கும் மனசுக்குள் சூரிதார் அணிய ஆசைதான். ஆனால் அக்கம் பக்கம், உறவுகள் ஏதாவது கமெண்ட் அடிப்பாங்களோன்ற பயம், சேலையையே திரும்பத் திரும்ப கட்டிக் கொள்ள வைக்கிறது!'' என்றார் திருமதி அமுதா சந்திரசேகர்.

''என் பொண்ணு இப்படி மாடர்ன் டிரெஸ் போடும் போது, நானும் அப்படி ஃப்ரீயா போட முடியாத அளவுக்கு வயசாயிடுச்சேங்கற ஏக்கம் தான் வருது!'' என்றார் ஐம்பது வயதான திருமதி கமலா கணேசன்.

''என்னதான் சொல்லுங்க... தழையத் தழையப் புடைவையைக் கட்டி, தலை நிறையப் பூ வெச்சுக் கிட்டுப் பெண்கள் வர்ற அழகை எந்த மாடர்ன் டிரெஸ்ஸாலும் தர முடியாதுங்க!'' என்பது ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்த கணேசனின் கட்சி.

பேட்டி :

**கிருஷ்ணா**



• கமலா கணேசன்



• சுகந்தி சம்பத்



• திருமதி லக்ஷ்மி



• செல்வி மது



• சந்திரசேகர்



• சுந்தரராஜுலு

# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990
பதிவு அலுவலகம் : 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002.
கிளை அலுவலகம் : 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை - 600 015. போன் : 459569



கந்தகோட்டம்
ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி

### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 3 மாதம் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு ★ |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ. 50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை வைப்புத் தொகை ரூ. 5,100/- 3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ. 500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ. 1,000/- வீதமும், 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ. 75,000/-ம் வழங்கப்படும்

### கனகதாரா டிபாசிட்

ரூ. **50,000/-** முதலீடு செய்வீர்
10 ஆம் ஆண்டு முடிவில் ரூ. **50,000/-** பெறுவீர்
அடுத்த 20 ஆம் ஆண்டு முடிவில்
ரூ. **1 கோடி** பெறுவீர்

### காமதேனு மாபெறும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும்தொகை | 10-ம் ஆண்டு நீங்கள் பெறும்தொகை | 15-ம் ஆண்டு பெறும்தொகை |
|---|---|---|---|
| Rs. 6,320 | Rs. 6,000 | Rs. 6,000 | Rs. 56,320 |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ. **3,450/-** செலுத்துவீர்.
**252** மாதங்கள் நிறைவில்
ரூ. **2** லட்சம் பெறுவீர்.

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs. 7,500 | 15 Yrs. | Rs. 1,25,000 |
| Rs. 9,000 | | Rs. 1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ. 100/- | 25 Yrs. | Rs. 3,00,000 |

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்.

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs. 1,000 | Rs. 1,184 | Rs. 1,430 | Rs. 2,000 | Rs. 2,535 |

பென்ஷனர் நலத்திட்டம் **20% P.a.** ★
ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும்
அறக்கட்டளை பயன் பெறலாம்.

சேமிப்பு திட்டம் **10% P.a.**
H.O. Friday Holiday
B.O. : Tuesday Holiday
பங்குதாரர்களுக்கு மட்டும்

தங்க நகை கடன்
**Rs. 3,000 PER 10 GRAM**
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)



சேர்மன் :
P. பாலசுப்பிரமணியம், B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
ஸ்ரீ கந்தகோட்டம்,
சென்னை-600 003.

இயக்குநர்கள் குழு
R. விவேகானந்தன் B.Com.,
V. சண்முகவடிவு B.A.,
A. சுப்பிரமணியன்
V. விஜயகோபால் B.Com., D.C.P.
M. ராஜேந்திரன்
P. ஏகாம்பரம்

பாதுகாப்பு பெட்டகம் குறைந்த வாடகைக்கு கிடைக்கும்.

# வானமே எல்லை அல்ல!



'அணு ஆயுத சக்திக்கு இந்தியா அடி போட்டு விட்டது' என்று பி.பி.சியும் சி. என். என்னும் குற்றம்சாட்டும் தொனியில் செய்தி ஒளிபரப்பின. எப்போது...? கடந்த அக்டோபர் பதினைந்து அன்று இந்தியா வெற்றிகரமாக ஒரு ராக்கெட்டை விண்வெளிக்கு அனுப்பிய போது. ராக்கெட்டின் பெயர் : பி.எஸ்.எல்.வி. - டி-2 (Polar Satellite Launch Vehicle D-2)

"அணு ஆயுத சக்தியைப் பெருக்கிக் கொள்வது நமது முக்கிய நோக்கம் இல்லை..." என்கிறார் அறிவியல் துறை எழுத்தாளரும் பேராசிரியருமான ராமச்சந்திரன். "விஞ்ஞான ரீதியான பலன்கள் அடைந்து முன்னேற்றம் காண்பதே நோக்கம்."

என்ன பலன்கள்...?

"பி.எஸ்.எல்.வி. டி-2 ராக்கெட், ஐ.ஆர்.எஸ். - பி2 என்ற செயற்கை கோளைச் சுமந்து போய் விண்வெளியில் சுற்றி வருவதற்கு விட்டிருக்கிறது. இந்த செயற்கைக் கோள் உதவியுடன் கண்ணுக்கெட்டாத தொலைவில் உள்ள இயற்கைச் செல்வங்களை இனம் காணலாம். உதாரணமாக - கனிமச் சுரங்கங்கள், ஆழ்கடலில் உள்ள செல்வங்கள்..." என்கிறார் ஐ.ஐ.டி. பேராசிரியர் ஒருவர்.

பாதுகாப்புத் துறை நிபுணர் கே. சுப்ரமண்யம், ராணுவம் அடையக்கூடிய பலன்களைச் சொல்கிறார் : "அந்நிய ராணுவத்தின் நடவடிக்கை, நடமாட்டங்கள், அவர்கள் அமைத்துள்ள முகாம்கள் குறித்த தகவல்களை சாடிலைட் நமக்கு அனுப்ப முடியும். பாக் படைகள் பற்றிய தவறான தகவல்களை முன்பு ஒருமுறை நாம் பெற்ற போது விளைந்த குழப்பங்கள் போல் இனிமேல் நடக்க வாய்ப்பு இல்லை. மேலும், ஜியோஸ்டேஷனரி சாடிலைட்களை நாம் அடுத்த கட்டமாக ஏவி விடும் வாய்ப்பு இருக்கிறது. இவை பூமிக்கு மேல் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருந்தபடி பூமியின் வேகத்திலேயே சுற்றுபவை -அதாவது ஒரே இடத்தை உற்று நோக்கிக் கொண்டிருப்பவை. இவற்றின் மூலம் தகவல் தொடர்பு துறையிலும் பாதுகாப்புத் துறையிலும் நமக்கு ஏராளமான அனுகூலம் கிடைக்கும். இப்போது அமெரிக்காவிடமும் சீனாவிடமும் இந்த வசதி உள்ளது. அவர்கள் அதைப் 'பாக்'குடன் பகிர்ந்து கொள்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது!"

பி.எஸ்.எல்.வி-2வுக்கு ஆன மொத்த செலவு 416 கோடி ரூபாய். இதன் பாகங்களில் சுமார் 30 சதவிகிதம்தான் அயல் நாட்டு இறக்குமதி. மற்றவை நமது விஞ்ஞானிகளின் சிந்தனையிலும் உழைப்பிலும் உருவானவை.

இனிமேல் சாடிலைட்களை விண்ணில் செலுத்த அயல்நாடுகளின் தயவு நமக்குத் தேவையில்லை என்பது உறுதியாகி விட்டது. "இது வளர்ந்த நாடுகளின் கண்களை உறுத்தத்தான் செய்யும். அதற்காக நாம் அரண்டு போய் விட வேண்டாம். விண்வெளிச் சாதனைகளில் நாமும் ஒரு பெரும் சக்தியாக உருவாகி விட்டோம்" என்று சொல்லியிருக்கிறார் புகழ்பெற்ற அணுஇயல் ஆராய்ச்சியாளரும் பேராசிரியருமான சதீஷ் தாவன்.

போன முறை இந்த ராக்கெட்டை விண்வெளியில் செலுத்திய போது, 'புரோகிராம்'ல் இருந்த சிறு தவறு காரணமாக முயற்சி பிசுபிசுத்துப் போனது. அதனால் தானோ என்னவோ, இம்முறை ஸ்ரீஹரிகோட்டா விஞ்ஞானிகள் மற்றும் ஊழியர்கள் அனைவரின் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர்.

— சித்தார்த்



# மூன்றாம் பிறை

“திங்கட்கிழமை அமாவாசை.. செவ்வா ரெண்டு... புதன் மூணு.... இன்னிக்குத்தான் மூணாம் பிறை... இருங்க பார்த்துட்டு வந்துடறேன்.. ஏதோ அந்தப் புண்ணியமாவது....”

மேற் கொண்டு சொல்ல வந்த மீனாட்சி அறைக்குள் நாகு நுழைவதைக் கண்டு ‘கப்’பென வாயை மூடிக் கொண்டு நகர்ந்தாள்.

‘உலக்கையை முழுங்கிட்டு உப்பில்லாப் பத்தியம் இருக்காப் பல... செஞ்ச பாவமெல்லாம் ஒரு மூணாம் பிறையப் பார்க்கற துனால போயிடுமோ.. இதோ... ஒரே பிள்ளை. பெண்டாட்டி, குடும்பம், குழந்தையின்னு வளர் பிறையா வளர வேண்டியவன்.. தன் சந்தோஷத்தையெல்லாம் பறி கொடுத்துட்டு நித்திய அமாவாசையா நிற்கிறான். அத்தனைக்கும் காரணம் இவதான்.. மூணாம் பிறை பார்க்கப் போறாளாம்...’

கண்மூடிப் படுத்திருந்த கிழவர் - நாகராஜனின் தந்தை மனசுக்குள் கசந்து கொள்ள...

மீனாட்சி தலை குனிந்து அறையை விட்டு நகர்ந்து, வீட்டு வாசலுக்கு வந்தாள்.

நிஜம்தான். ஒரே மகன் என்று மார்பிலும், தோளிலும் போட்டு சீராட்டி வளர்த்தவள் தான் மீனாட்சி. அவன் தனது இருபத்தியைந்து வயதில் தன்னுடன் கல்லூரியில் படித்த மலர் விழியை பெற்றோருக்குத் தெரியாமல் மணந்து வந்து நின்ற போது... தகப்பனை விடவும் தாயான மீனாட்சிதான் எகிறிக் குதித்தாள்.

“இவளுக்கு இடமில்லாத வீட்டுல எனக்கும் இடமில்லே....”

மகனின் பிடிவாதம்தான் அவளைக் கட்டுப் படுத்தியதே தவிர - அவள் நாக்கு பம்பரத்தின் சாட்டை போலச் சுழன்று...

எத்தனை ஏசியிருக்கிறாள் மருமகளை... கீழ் சாதிப் பெண் என்று, மகன் அருகே இல்லாத போதெல்லாம் கொஞ்சமாகவா படுத்தினாள்.

மணமான ஒரே வருடத்தில் வயிற்றுப் பிள்ளையோடு அந்தப் பெண் உடம்பில் மண்ணெண்ணையை விட்டுக் கொளுத்திக் கொண்டது.

மரண வாக்கு மூலத்தில் கூட நடந்த கொடுமையை வெளியே சொல்லிக் கொள்ளவில்லையே....

‘எங்க அத்தை எனக்கு அம்மா மாதிரி.. இந்த நெருப்பு என்... என்... கவனப் பிச காலே...’

மூன்றாம் பிறைக்காக வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த மீனாட்சியின் விழிகளைக் கண்ணீர் மறைத்தது.

மலர் விழி போனது முதல் நாகராஜனின் முகத்தில் சிரிப்பே அஸ்தமித்து விட்டது. யந்திரம் போல ஆபீஸ் போவதும் வருவதும்...

மீனாட்சியின் கணவர் படுத்த படுக்கை... சாஸ்திரங்களையும், சம்பிரதாயங்களையும் மூட்டை கட்டி வைத்து விட்டாலும், பழக்க தோஷம் இப்படி... பிறை தேடி, பரக்க விழித்தபடி தெருவில் நிற்கிறது....

“குவா... குவா....”

மீனாட்சி கலவரத்துடன் குரல் வந்த திசையில் பார்த்தாள். வீட்டு வாசலில் இருந்த குப்பைத் தொட்டியிலிருந்து... பிஞ்சு மழலையின் வீறிடல்.

“அய்யோ... குழந்தை போல இருக்கே...”

“பொண் குழந்தை. அதுக்குத்தான் தொட்டில் இருக்கே. இத குப்பைத் தொட்டியிலதானா போடணும்....”

மீனாட்சி ஓடிப் போய் மெள்ள குழந்தையை கையில் எடுக்கிறாள். ஜாதி வித்தியாசம் பார்க்கத் தெரியாத பச்சிளம் சிசு. மீனாட்சியின் அணைப்பில், மார்பில் முகம் புதைத்து தாயைத் தேடுகிறது... ‘குப்’பெனக் கண்கள் நிறைகிறது மீனாட்சிக்கு....

திரும்பிப் பார்க்கிறாள். முதுக்குப் பின்னால் நாகு. தாயின் அணைப்பில் இருந்த சிசுவைப் பார்த்துச் சிரித்த சிரிப்பில்....

மீனாட்சி தேடிய மூன்றாம் பிறைச் சந்திரன்!

— அனுராதா ரமணன்


பட்டுகள்
பனாரஸ்
கோரா சில்க்
ஷி:பான்ஸ்
காட்டன்ஸ்
Golden Collectionz
10% தள்ளுபடி
நவம்பர் 2 வரை
ஹனீபா
டெக்ஸ்டைல்ஸ்
14 தியாகராயா ரோடு, தி. நகர், சென்னை 600 017 போன் : 4343546, 4346555
பிரபல சிங்கப்பூர் நிறுவனமான ஹனிபா டெக்ஸ்டைல்ஸ் பி. லிட்., சார்ந்தது

## இல்லற மங்கையர்களுக்கு இனிமையான தீபாவளி போனஸ்



# பூமி கேஸ்



**உடனடி சப்ளை     இன்றே வாங்குவீர்!**

இந்தியாவிலேயே முதன்முதலில் தனியார் கேஸ் உரிமம் பெற்றது பூமிகேஸ். வெளிநாட்டிலிருந்து 11 கிலோ சிலிண்டர்கள் இறக்குமதி செய்யப்பட்டது பூமிசிலிண்டர். இந்தியாவில் மாடல் பிளாண்ட்டாக தேர்வு செய்யப்பட்டது பூமிகேஸ் பிளாண்ட்.

டிசம்பர் '94-ல் பூமி பாட்லிங் கேஸ் கம்பெனியின் இரண்டாவது பிளாண்ட் பெரியார் மாவட்டம், தாராபுரம் தாலுக்காவில் நிறுவப்படுகிறது.

**வாடிக்கையாளர்களுக்கு எங்களது தீபாவளி நல்வாழ்த்துக்கள்!**

### விலை விபரம்

| | | |
|---|---|---|
| ISI பூமி ஸ்டவ் — கேஸ் கனெக்ஷனுடன் | ரூ. | 3,540/- மட்டும் |
| ISI சிலிண்டர் ஸ்டவ் இல்லாமல் கேஸ் கனெக்ஷன் | ரூ. | 2,490/- மட்டும் |
| பூமி கேஸ் 12 கிலோ சிலிண்டர் | ரூ. | 140/- மட்டும் |
| பூமி கேஸ் 11 கிலோ சிலிண்டர் | ரூ. | 126/- மட்டும் |
| கேஸ் சிலிண்டர் டெபாசிட் | ரூ. | 1,000/- மட்டும் |

BBG

# பூமி பாட்டிலிங் கேஸ் கம்பெனி (பி) லிமிடெட்

648, அண்ணா சாலை, சென்னை - 600 006. தொலைபேசி: 8273863
பதிவு அலுவலகம்: 76, டி.எச். ரோடு, மூலக்கடை, சென்னை - 600 060.
தொலைபேசி: 5376624

பிளாண்ட்-I: 1, எஸ்.பி. கண்டிகை ரோடு, வங்கனூர்,
பள்ளிப்பட்டு தாலுக்கா, செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம், தொலைபேசி: 04118 7287

பிளாண்ட்-II: 1, கோவிந்தபுரம் சாலை, குண்டடம், தாராபுரம் தாலுக்கா,
பெரியார் மாவட்டம் - 638 702, தொலைபேசி: 042586 - 3333



# 4 பேர்



நாலு பேர் என்ன சொல்வார்களோ என்பதில் சின்னக் கருப்பனுக்கு எப்போதும் கவலை. ஆபீஸுக்கு காரியரில் சாப்பாடு கொண்டு வர ஏற்பாடு செய்திருந்தான். பரமேசுவரியின் கை மணத்தை நன்றாக ரசித்துச் சாப்பிட்டு வந்தவனை ஒரு பேச்சு அப்படியே மாற்றி விட்டது.

"ஏன்யா நாமெல்லாம் டிபன் பொட்டலத்தைப் பிரிச்சு வைச்சுக்கிட்டுக் கொறிக்கிறோம்; இவரு என்னடான்னா வக்கணையா ஐந்து அடுக்கு காரியரை அவிழ்த்துப் பரப்புறாரே" என்று ரங்கமன்னார் சொன்னதாக பியூன் ஆதிமூலம் புகார் செய்ய, மறுநாள் முதல் சின்னதாக ஒரு பொட்டலத்துடன் தான் ஆபீஸுக்குக் கிளம்பினான்.

"ஆபீஸிலே பியூன் ஏதோ சொன்னாருங்கிறதுக்காக யாராவது வயிற்றைக் காயப் போடுவாங்களா? அவங்கள்ளாம் காலை எட்டரைக்கே சாப்பாடு முடித்துப் பழகியவங்க. உங்களுக்குக் காலைல ரெண்டு இட்டிலிக்கு மேலே இறங்காது. வித்தியாசம் இல்லையா?" என்று பரமேசுவரி எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் கேட்கவில்லை.

அண்ணன் மகளுக்குக் கல்யாணம் நிச்சயமாகிக் கடிதம் வந்ததும் ஒரு தங்கச் சங்கிலி வாங்கி வந்தான்.

"இப்படி யாராவது கடன் பட்டு பரிசு வாங்கிட்டுப் போவாங்களா? போக வர செலவே எக்கச்சக்கமாகுமே" என்றாள் பரமேசுவரி.

" 'கைநிறைய சம்பாதிக்கிறான்; ஒரு நல்ல பிரசண்டேஷன் தரக் கூடாதா?' என்று நம்ம உறவு மனுஷங்க யாராவது கேட்டுட்டா என்னால் தாங்க முடியாது" என்றான் சின்ன கருப்பன்.

"நாளைக்கு நம்ம வனிதாவுக்குக் கல்யாணம்னு நடக்கும் போது உங்க அண்ணன் மகன் வட்டியும் முதலுமா காசுமாலை பண்ணிப் போடப் போகுதாக்கும்" என்றாள் பரமேசுவரி.

"அவ போடறா, இல்லே. அது பற்றி இப்ப என்ன? நாம நாலு பேர் குறைசொல்ல இடம் வைக்காம செய்யணும்" என்றான்.

பரிசுப் பொருளுடன் கல்யாணத்துக்குப் போனார்கள். முகூர்த்தம் முடிந்ததும் மணமகன் கழுத்தில் சங்கிலியைத் தன் கைப்படப் போட்ட போது பரமேசுவரனுக்குப் பெருமையாகத்தான் இருந்தது. உறவினர் சிலர் புகழ்ந்த போது மனசுக்குள் கணவரிடம் மன்னிப்புக் கூடக் கேட்டாள். 'நல்ல வேளை என் பேச்சைக் கேட்காமல் போனாரே' என்று எண்ணினாள்.

சாப்பாடு முடிந்து வெற்றிலை போட்டு மென்ற பிறகு 'அக்கடா' என்று படுத்தான் சின்னகருப்பன். கல்யாண மண்டபத்தில் பெண் வீட்டாரின் அறை பக்கத்திலேதான் இருந்தது. கண் சொக்க ஆரம்பித்த சமயம், "ஏண்டியம்மா பரமேசுவரி" என்று அண்ணி தன் மனைவியை நீட்டி முழக்கி அழைப்பதைக் கேட்டு காதைத் தீட்டிக் கொண்டான்.

"எத்தனை நாளா இப்படி அவமானப்படுத்தணும்னு திட்டம் போட்டிருந்திங்க? நாங்களே மாப்பிள்ளை வீட்டாரிடம் ஒப்புக்கிட்ட அளவுக்கு நகை செய்ய முடியலைன்னு கெஞ்சி சம்மதிக்க வைச்சிருக்கோம். நீ பாட்டுக்கு தங்கச் சங்கிலியைச் செய்து மாட்டினா எங்களைப் பற்றி என்ன நினைப்பாங்க? பஞ்சத்து ஆண்டின்னுதானே! அண்ணனுக்குத் தம்பி காட்டுற மரியாதையா இது?"

பரமேசுவரி வெளியே வந்தாள். சின்ன கருப்பன் எழுந்து உட்கார்ந்தான். மனைவியின் கலங்கிய கண்களைப் பார்த்தான்.

"ராத்திரி ரயிலுக்குக் காத்திருக்க வேணாம் பரமேசுவரி. மத்தியானம் பஸ்ஸுக்கே புறப்படுவோம்" என்றான்.

பரமேசுவரி தயங்கி, ஏதோ கூற வாயெடுத்தாள்.

"நாலு பேர் என்ன நினைப்பாங்கன்னு கவலைப்படாதே; உடனே புறப்படு" என்றான் சின்னகருப்பன்.

— ஜெயந்தி


லாலா ஸ்வீட் ஸ்டால்
இன்னிக்கும் ஸ்டாக் இல்லையாம். டெல்லி பாதுஷா என்னைக்கு தான் கிடைக்குமோ!
அல்வா ஸ்டால்
புண்ணியமாப் போகுது. தள்ளி நில்லுங்க சார். எங்க கடை அல்வாவை சாப்பிட்டு தான் உங்களால வாயைத் திறக்க முடியல்லேன்னு யாரும் தப்பா நினைச்சுக்கப் போறாங்க!
பாம்பே ஸ்வீட்
சாரி சார். கல்கத்தா ரசகுல்லா, திரு. நெல்வேலி அல்வா, மைசூர் பாகெல்லாம் இல்லை. வேற மாநில ஸ்வீட்களை விற்க பால் தாக்கரே தடை விதிச்சுட்டார். பாம்பே அல்வா மட்டும் தான் இருக்கு.
மு.க. இனிப்பகம்
கடைக்குப் புதுப் பலகை மாட்ட எப்போ தான் வேளை வருமோ?
மு.க அண்ட் சன்ஸ் இனிப்பகம்
ஸ்வீட் அரசியல்!

பதிவு எண்: 26383 போன்: 583241

# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி விதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



**மகளிர் ஆண்டு திட்டம்**

**1994** சர்வதேச மகளிர் ஆண்டை முன்னிட்டு பெண்கள் பெயரில் செலுத்தப்படும் பிக்சட் டிபாசிட்டுகளுக்கு 1% அதிக வட்டி வழங்கப்படும்.
குறைந்த அளவு டிபாசிட் ரூ. 5000/- காலம்: 1 ஆண்டு



**பிறந்த நாள் பரிசு திட்டம்**

ஆண்டுக்கு ரூ. **920/-** வீதம் 4 ஆண்டுகள் செலுத்தி 5ஆம் ஆண்டு முதல் ரூ. **1000/-** ஆண்டுதோறும் தொடர்ந்து பெறுவீர்!!



**கல்பதரு மணிபேக் திட்டம்**

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !



**முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.**

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | **20%** |
| ரூ. 10,000 கீழ் | | **19%** |

**சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்**





**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்




பக்கத்து வீட்டு ஜன்னல் வழியாக அந்த கலர் டீ.வி. தெரிந்தது. மஞ்சளும் சிவப்புமாய் மாறிய வர்ணங்கள். கைலாசசுந்தரம் பெருமூச்சு விட்டார். நிரம்ப நாள் ஆசை. கறுப்பும் வெள்ளையுமாய் டீ.வி. பார்த்துக் கண் அலுத்து விட்டது.

வண்ணம் வேண்டும். வாழ்ந்த வாழ்க்கையும் வண்ணம் அற்றுப் போயிற்று. ஒன்றா இரண்டா.. ஐந்து. ஐந்தும் பெண். கைலாசசுந்தரம் அரசன் இல்லை. சாதாரண குமாஸ்தா. அதனால் ஆண்டிக்கும் கீழாய் நிலை போயிற்று. ஒவ்வொருத்தியையும் படிக்க வைத்து, கல்யாணம் பண்ணி வைத்து, கடன் அடைவதற்குள் அவள் வயிற்றைத் தள்ளிக் கொண்டு வர, பிரசவம் பார்த்து... ஈஸ்வரா! நினைக்கும்போதே சிலிர்த்தது. வெறும் ரசமும் துவையலுமாய் ஓட்டிய நாட்கள், நல்ல சோற்றுக்கு மனசு ஆலாய்ப் பறந்த நாட்கள்.

எல்லாக் கடமையும் முடிந்து மிஞ்சியது இந்த குச்சுவீடு மட்டும். ஐந்து பெறாமல் ஒன்றிரண்டோடு நிறுத்தியிருந்தால் நல்ல வீடு, நகை என்று மிஞ்சியிருக்கும். மனசில் இன்னும் ஏக்கமிருந்தது.

சீட்டு சேர்ந்தால் கலர் டீ.வி. வாங்கலாம் என்று பேப்பரோடு வந்த விளம்பரம் ஞாபகம் வர, கைலாசசுந்தரம் கடைக்குக் கிளம்பினார். மாசம் ஐநூறுக்கும் மேல் தவணை கட்ட வேண்டியிருந்தது. மனசில் மாற்றம் சின்ன குத்தூசியாய்க் குத்திற்று. வருகிற பென்ஷனில் ஐநூறு கொடுத்து விட்டால் மறுபடியும் ரசமும் துவையலுமா? நாற்பது வருஷமாய் கூட கஷ்டம் அனுபவித்த பாக்யலெக்ஷ்மிக்கு பொட்டுத் தங்கம் போட முடிந்ததா?

இருக்கிற டீ.வி. போறாதா? மனசு சமாதானமானது போல் நடித்தது. ஓர விளிம்பில் பக்கத்து

# 5 பெத்தவன்

வீட்டு ஜன்னல் வழியே மின்னிய வண்ணம் மின்னிற்று. வழியில் ஒரு ஆஸ்பத்திரி வேன் நின்றிருந்தது. ஒரு பெரியவரை வலுக்கட்டாயமாய் வேனுக்குள் திணித்தனர். வேன் கிளம்ப, தெரு மக்கள் கலைய ஆரம்பித்துச் சிதறினார்கள்.

''பாவம்பா. அந்த பிள்ளைங்க கைவிட்டோன்ன பைத்தியம் ஆயிட்டாரு. கடவுள் வச்ச விதி!''

கைலாசசுந்தரம் பேசின மனிதரை கைப்பிடித்து நிறுத்தினார்.

''அஞ்சும் பொண்ணாங்க?''

''இல்லைங்க. பசங்கதான், கஷ்டம்! அவனவன் பம்பாய்ல பெரிய கம்பெனியிலிருக்காங்க. ஒரு வாய் சோத்துக்கு வழியில்லை இவருக்கு. தெருவுல இவர் பண்ற தொந்தரவு தாங்கல ஸார். பாவமாருந்தாக் கூட ஆஸ்பிடல்ல சேக்கறதைத் தவிர வேற வழியில்ல.''

கூட்டம் கைலாசசுந்தரத்தைத் தாண்டி வர, அவருக்கு ஐந்து பெண்களின் முகமும் ஞாபகமும் வந்தது. ''எங்களோடு வந்து இருங்கள்'' என்று முத்து முத்தாய் நீலநிற காகிதத்தில் எழுதும் கையெழுத்து அன்போடு வண்ணமாய் மனசில் மின்னிற்று.

— தமயந்தி



# துகரில்

# தீபாவெ(ள்)ளி டெபாஸிட் செய்வீர்

## வழங்குகிறோம்

## DUGAR

தீ பா வெ (ள்) ளி



நீங்கள் தீபாவளிக்கு முன் துகரில் ஏதேனும் ஒரு டெபாஸிட் திட்டத்தில் முதலீடு செய் திடுங்கள். நீங்கள் பிரமிக்க

டெ பா ஸி ட்

வைக்கும் ஆச்சரியம் பெறுவீர்கள் அத்துடன் துகரின் தனித்தன்மையான தீபாவளி வாழ்த்துக்களை பெறுங்கள்.

## DUGAR
## FINANCE INDIA LTD

HIRE PURCHASE ⊃ LEASING ⊃ MERCHANT BANKING ⊃ PROPERTY DEVELOPMENT ⊃ PUBLIC DEPOSITS ⊃ FOREIGN EXCHANGE

REGD. OFFICE: DUGAR TOWERS, 123 MARSHALLS ROAD, MADRAS 600 008. ☎ 8283535 (10 LINES) FAX : 8281122

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ADYAR | ☎ 4919046 | | | | | | | SALEM | ☎ 68769 |
| MOUNTROAD | ☎ 8521888 | BANGALORE | ☎ 5585539 | CALICUT | ☎ 63344 | GUDUR | ☎ 21830 | SECUNDERABAD | ☎ 846006 |
| T NAGAR | ☎ 4341541 | MALLESWARAM | ☎ 365276 | COIMBATORE | ☎ 231867 | MADURAI | ☎ 36106 | TIRUPATI | ☎ 21977 |
| MYLAPORE | ☎ 4942256 | BOMBAY | ☎ 241424 | ERNAKULAM | ☎ 369515 | NELLORE | ☎ 27576 | VISHAKAPATNAM | ☎ 46581 |

**Particulars required to be specified as per Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules, 1977.**

(a) **Name of the Company**: DUGAR FINANCE INDIA LIMITED (b) **Date of Incorporation**: 20th May, 1981 (c) **Business**: Hire Purchase, Leasing, Property Development, Merchant Banking, Foreign Exchange & Portfolio Management. (d) **Branches**: Mount Road, Mylapore, T Nagar, Adyar (Madras), Bangalore, Malleswaram, Calicut, Coimbatore, Ernakulam, Gudur, Madurai, Nellore, Salem, Secunderabad, Tirupati, Visakhapatnam (e) **Management**: The Company is managed by its Managing Director under the supervision of the Board

(f) Names, Addresses, and occupation of the Directors
• **DR. C. ANNA RAO** (Chairman) Former Chairman, Board of Trustees, TTD, Chalkam Anna Rao Road, [illegible] Colony, Tirupati 517 507 • **Shri. B. LALCHAND MARLECHA** (Vice-Chairman) Merchant & Banker 30, Mannarswami Koil Street, Royapuram, Madras 600 013 • **Shri. C.B. RAO** Company Director White House, Gudur 524 101 (A.P.) • **Shri. V. RAMACHANDRAN** Senior Advocate 24, Nungambakkam High Road, Madras 600 034 • **Shri. C.V. KRISHNAIAH** Mine Owner & Company Director "Sree Krupa", Nehru Nagar, Gudur 524 101 (A.P.) • **Shri. R. RAMAKRISHNAN** Industrialist & Former Member, Rajya Sabha "Hari", 14, Seethamma Road, Madras 600 018 • **Shri. M.K. PANDURANGA SETTY** Industrialist & Company Director "Prashanth", 27, Bull Temple Road, Bangalore 560 004 • **Shri. K.S.T. PANI** Chief General Manager, (Retd) SBI & Company Director, "Suseelam", 45, Mandapam Road, Kilpauk, Madras 600 010 • **Shri. T. PADAM DUGAR** Company Director 21, Commander-in-chief Road, Madras 600 105 • **Shri. N. TARACHAND DUGAR** (Managing Director) Industrialist & Banker 21, Commander-in-chief Road, Madras 600 105

(g) & (h) Profits of the Company, before and after making provision for Tax and Dividends, declared by the Company for the three financial years immediately preceding the date of advertisement

| Year ended | Profit before provision for tax (Rs. in Lakhs) | Profit after provision for tax (Rs. in Lakhs) | Dividend declared |
|---|---|---|---|
| 30-06-1991 | 48.91 | 45.96 | 25% |
| 30-06-1992 | 81.55 | 78.26 | 25% |
| 30-06-1993 | 92.91 | 81.50 | 25% |

(i) Summarised financial position of the Company as appearing in the two latest Audited Balance Sheets

| Liabilities | 30-06-93 | 30-06-92 | Assets | 30-06-93 | 30-06-92 |
|---|---|---|---|---|---|
| | (Rs. in Lakhs) | | | (Rs. in Lakhs) | |
| Share Capital | 300.00 | 300.00 | Fixed Assets | 590.77 | 532.34 |
| Reserves & Surplus | 111.59 | 84.36 | Investment | 64.69 | 27.00 |
| Secured Loans | 625.77 | 664.49 | Current Assets | 1853.32 | 1610.21 |
| Unsecured Loans | 1303.37 | 924.81 | Loans & Advances | 212.74 | 199.33 |
| Current Liabilities & Provisions | 442.60 | 400.77 | Miscellaneous Expenditure | 59.81 | 15.55 |
| | 2783.33 | 2384.43 | | 2783.33 | 2384.43 |

(j) **Contingent liabilities**

| | 30-06-93 (in Lakhs) | 30-06-92 (in Lakhs) |
|---|---|---|
| (a) Estimated amount of contracts remaining to be executed on capital account and not provided for | 1.00 | 3.00 |
| (b) Counter guarantees to Bankers | 5.00 | 5.00 |
| The Company can raise by way of deposits under the directions | 3517.80 | 3766.12 |
| Aggregate of deposits actually held | 1303.37 | 924.81 |

(k) **The Company has no overdue deposits other than unclaimed deposits**

(l) **The Company hereby declares** (i) that the company has complied with the applicable provisions of the directions of Reserve Bank of India (ii) that the compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the RBI and (iii) that the deposits accepted by the Company will be unsecured and rank pari passu with other unsecured liabilities.

This advertisement is issued on the authority and in the name of the Board of Directors of the Company. The text was approved by the Board of Directors on 23rd December 1993 and a copy duly signed by a majority of the Directors has been filed with the Regional Office of Reserve Bank of India, Department of Financial Companies, Bangalore.

By Order of the Board
For DUGAR FINANCE INDIA LIMITED
N. TARACHAND DUGAR Managing Director

/ 10 UTTM - MM - 00

# Kalki Shopping Page

## விழா கால விற்பனை

## Meco mix

3 JAR MIXER GRINDER

பல வருடங்களாக தமிழ்நாடு முழுவதும் தொடர்ந்து விற்பனையாகிக் கொண்டிருக்கும் மீகோ-மிக்ஸ் 3 ஜார் கொண்டது



UNIQUE/MAAH

தயாரிப்பாளர் & சர்வீஸ் சென்டர்

**MECO APPLIANCES**

Off.: 342 / 1, Anna Salai, Nandanam,
(Opp. G.R. Complex) Madras - 35. ☎ : 457828

---

## கோபுர தரிசனம்

ஆன்மிக மாத இதழ்

### தீபாவளி மலர் - 94

ஒவ்வொருவர் வீட்டிலும் அவசியம் படிக்க வேண்டிய அற்புதக் கருவூலம்

தெய்வீக வண்ணப்படங்களுடன்
விலை ரூ. 20/-

நிர்வாகி,
**கோபுர தரிசனம்**
M-138, ஏழாவது குறுக்குத் தெரு, திருவள்ளுவர் நகர்,
திருவான்மியூர்,
சென்னை - 41.
போன் : 419330

---

## DEEPAVALI SPECIAL

VIMAL

Raymond's SINCE 1924

Paper Silks SAREES

Shaída SAREES

VIPUL SAREES

Garden VARELI

# VELLORE SILK HOUSE

12, Filterbed Road, Vellore-1.

---

## இயற்கை மூலிகைப் பொடிகள் சிகிச்சை

சர்க்கரை, ஆஸ்த்மா, மூட்டுவலி, நரம்புத் தளர்ச்சி, ஞாபக சக்தி, அல்சர், காஸ்டிரிக், மூலம், B.P., இருதயக் கோளாறு, தோல் வியாதிகள், உடல் இளைக்க, கிட்னி, விஷக்கடிகள், முடி கறுத்து நீண்டு வளர, கற்பப்பை கோளாறுகள், கண் தொல்லைகள் முதலியவற்றிலிருந்து பூரண குணம் பெற நம் மூன்னோர்கள் சித்தர்கள் கூறியபடி நோய் வென்று வாழலாம். பரம்பரை சித்த வைத்தியர்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட இயற்கை அபூர்வ மூலிகைப் பொடிகள் அனைத்தும் கிடைக்கும்.

மருத்துவரை நேரில் சந்திக்க மாலை 5 to 8.

**SAKTHI NATURE CURE RESEARCH AND SERVICE CENTRE**
1, YMCA BUILDING, ROYAPETTAH,
MADRAS -600 014. Ph: 831141
(Opp. Govt. Royapettah Hospital)

# Kalki Shopping Page

## 'U' WANT TO BE SLIM



**BEAUTY &**

**ATTRACTIVE WEAR**

**"Karishma"**

- ★ DEALERS OF KARISHMA
- ★ CHURIDARS & SAREES
- ★ WHOLE SALE AND RETAIL SALES AVAILABLE

CONTACT :

**AALURI SAREES**

(DEALERS OF KARISHMA CHURIDARS & SAREES)

4/24 R.K. MUTT ROAD
LUZ BAZAAR, MYLAPORE
MADRAS - 600 004. PHONE : 4935791



**Sri KRISHNA**
**at 39, GODOWN STREET.,**
**at HEART OF CITY**

## Sree Krishna Cut Piece Collection (P) Ltd.

**No. 39, Godown Street, (Opp. Flower Bazaar),**
**Madras - 1 Tel : Off : 589596**

WHOLESALE & RETAIL AT MILLS PRICE

| | | |
|---|---|---|
| Stockist for Suiting<br>All cutpiece varieties | : | OCM, Digjam, Raymonds, Vimal, BSL, Siyaram's, Gwaliar, Graviera, Sangam |
| Stockist for Shirting<br>All cutpiece varieties | : | Beekalene, Madura, Tunicas, K. L. Fab, Surya, Ajantha, Samrath,Oxford, Orkay, Gini. |
| Stockist for Sarees | : | Fancy Sarees, Vimal, Vipul, Khatau, Santosh Sarees & Matching blouse bits 2 x 2 & Rubia Chiffon, Gini, Madura, Uniform. |

(KICK YOUR JOB INVEST RS. 5,000/- AND EARN Rs. 50,000/- YEARLY.)

SUNDAY'S ALSO SHOP OPEN

NO BRANCH AT PURASAWALKAM RETAIL AREA.


ஏற்கனவே சாப்பிட்ட மருந்துகளாலே வாயெல்லாம் கசக்குது... இன்னொரு மருந்தா..?
தேர்தல் நெறிமுறைகளை மீறத்தடை
வாக்காளர் -களுக்கு அடையாள அட்டை
தேர்தல் செலவுகளுக்கு முறையான கணக்கு
அரசியல் கட்சிகள்
உட்கட்சி ஜனநாயகம் செயல் -படாத கட்சிகளுக்குத் தேர்தலில் நிற்கத் தடை
சேஷன்
ம்.. சாப்பிட்டுத்தான் ஆகணும்...
மதி
அண்ணா! உன் பேரை வாங்கான நான்தான் உனக்கு நேர்ந்த அவமானத்தைத் துடைத்தெறிவேன்!
சேஷன் மன்னிப்பு கேட்கும் வரை விட மாட்டேன்
நாம பேச்சு வார்த்தை நடத்துறது யாருக்கோ பிடிக்கலைன்னு நினைக்கிறேன்
விடுதலைப் புலிகள்
சந்திரி -கா
ராணுவ உயர் அதிகாரிகள்



# கல்கி




1994
அக்டோபர் 30
பவ
ஐப்பசி 13
மலர் : 53
இதழ் : 13


தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# ஆண்டவனே, அண்ணாவைக் காப்பாற்று!

அண்ணாதுரை அவர்கள் நோய்வாய்ப்பட்டு, அவர் உடல்நிலை ரொம்பக் கவலை அளிப்பதாக இருந்த சமயத்தில், சென்னை அடையாறு புற்றுநோய் மருத்துவமனை அருகே காணப்பட்ட ஒரு துணி பேனரில் எழுதியிருந்தது : "இறைவா, அண்ணாவைக் காப்பாற்று!"

இன்றும் அதையே திரும்பவும் சொல்லலாம் போலிருக்கிறது! "ஆண்டவனே, அண்ணாவைக் காப்பாற்று! சேஷனிடமிருந்து காப்பாற்று; அத்துடன் அண்ணாவின் நற்பெயரைக் காப்பாற்ற போட்டா போட்டியில் இறங்கியிருக்கும் இந்த அரசியல்வாதிகளிடமிருந்தும் அவரைக் காப்பாற்று!"

சேஷன் வாழ்க்கை வரலாறு நூலுக்குத் தற்போது நீதிமன்றம் தாற்காலிகத் தடை உத்தரவு பிறப்பித்திருப்பதால் அதில் அண்ணா பற்றி எழுதப்பட்டுள்ளவை குறித்து நாம் கருத்துத் தெரிவிப்பது முறையாகாது.

ஆனால் சேஷனின் புத்தகத்தில் எழுதப்பட்டுள்ள விஷயங்களை யொட்டி நடந்துள்ள ஆர்ப்பாட்டங்கள், தொடரப்பட்டுள்ள வழக்குகள் முதலியவற்றில் "அண்ணா நாமம் வாழ்க" என்ற ஆவலைக் காட்டிலும் "நம் காட்டிலே மழை பெய்ய வேண்டும்" என்ற ஆசைதான் அதிகமாகத் தெரிகிறது. அண்ணாவிடம் யாருக்கு அதிக அக்கறை என்று காட்டிக் கொள்வதிலும், அதன் மூலம் மக்கள் கவனத்தைக் கவர்ந்து பிராபல்யம் தேடுவதிலும்தான் அதிகக் கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது.

அல்லாதுபோனால் புத்தகத்துக்குத் தடை உத்தரவு கோரி நீதிமன்றத்தில் மனுச் செய்து வெற்றி பெற்ற ஜெயலலிதா, அத்துடன் நில்லாது, "நான்தான் சாதித்தேன்; மற்ற எல்லோரும் வாய்ச் சொல் வீரர்கள்தான்" என்று கிண்டலடித்திருக்க மாட்டார். ஆக, அண்ணாவின் நற்பெயரைக் காப்பதைக் காட்டிலும் தமக்கு நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள அதை ஓர் உபாயமாகப் பயன்படுத்துவதிலேதான் அவருக்குச் சிரத்தை இருந்திருக்கிறது.

ஜெயின் போக்கை 'ஆணவம்' என்று வர்ணித்த கருணாநிதி, மறு நாள் தாமும் நீதிமன்றத்தை அணுகி தி.மு.க. சார்பில் இன்னொரு தடை உத்தரவு பெற்றிருக்கிறார். தாமொன்றும் 'ஜெ'க்கு சோடை போகவில்லை என்று காண்பித்துக் கொண்டவரை சரி, ஆனால் ஏதோ துக்க தினம் என்று கூறி கறுப்புச் சட்டை அணிந்து, போட்டோக்களுக்கு தி.மு.க. தலைவர்கள் போஸ் கொடுத்து இருக்கிறார்களே, அது எதற்கு? அப்படி என்ன துக்கம் நேர்ந்து விட்டது? தப்பாகவோ சரியாகவோ ஏதோ ஒன்றை சேஷன் எழுதினால் அதனால் அண்ணாவின் நற்பெயர் கெட்டுவிடப் போகிறதா? அல்லது ஏற்கெனவே உள்ள அவரது புகழுக்கு மேல் புதிதாக ஏதாவது கிடைத்து விடப் போகிறதா? மக்கள் மதிப்பிலே அண்ணா உயரவோ தாழ்ந்து விடவோ போகிறாரா? எதற்கு துக்கம்? 'ஐயோ! சேஷன் இப்படி எழுதி விட்டாரே' என்பதற்கா? அப்படியானால் சேஷன் எழுத்துக்கு நீங்கள் அளவுக்கு மீறிய முக்கியத்துவம் தருவதாக அல்லவோ ஆகும்?

மக்கள் கவனத்தைத் தி.மு.க. பக்கமும் திருப்ப ஒரு உபாயம் செய்தார் மு.க. என்றால், வை.கோ.வோ அவருடைய வழக்கப்படி டில்லிக்கு ஓடி, தொண்டர்களுடன் சேர்ந்து ஆர்ப்பாட்டம் நடத்தி, கைதாகி, கூடவே விடுதலை பெற்றதுடன், தாமும் தம் பங்குக்குத் தடை உத்தரவுக்காக வழக்குத் தொடுத்து அண்ணாவின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படாமல் காப்பாற்றித் தந்து விட்டார்!

இவ்வளவு ஆன பிறகு சேஷன் ஒரு குரல் அழுதிருப்பது இந்தத் தமாஷ் நாடகத்தின் உச்சகட்டம்! "ஐயய்யோ! அண்ணாவைப் பற்றி நான் தப்பும் தவறுமாக அப்படியெல்லாம் எழுதுவேனா? அன்று பலரால் பேசப்பட்டதைத்தானே எழுதினேன்? நானாக என்ன சொன்னேன்? நான் எழுதியதைத் தவறாகப் புரிந்து கொண்டு பத்திரிகைகள் தாம் பெரிதுபடுத்தி விட்டன! நான் அண்ணாவை எத்தனை தடவை, எத்தனை விதமாகப் பாராட்டி பேசியிருக்கிறேன் தெரியுமா? அவருடைய மதிப்பு எனக்குத் தெரியாதா? என்றெல்லாம் கூறி அண்ணாவின் நற்பெயரைக் காப்பாற்ற சேஷனும் முன்வந்திருக்கிறார்!

வழக்கு நீதிமன்றத்தில் இருக்கும் போது, ஒன்று இவர், தாம் எழுதியது சரி என்றும் வழக்கைச் சந்திக்கத் தயார் என்றும் கூற வேண்டும்; அல்லது, "தவறு நடந்து விட்டது வருந்துகிறேன்; குறிப்பிட்ட பகுதியைப் புத்தகத்திலிருந்து நீக்குகிறேன்" என்று வாக்களிக்க வேண்டும். இரண்டுமின்றி நீலிக்கண்ணீர் வடிப்பது அவருக்கோ அவர் வகிக்கும் உயர் பதவிக்கோ அழகல்ல. அரசியல்வாதியோ, அதிகாரியோ அவர்கள் உள்ளங்களை ஊடுருவும் எக்ஸ்ரே கண்கள் மக்களுக்கு உண்டு.

# இதோ ஒரு மணப்பெண்

அன்பு மனைவி. 30 ஆண்டுகளுக்கு முன் ஓர் இளம் மணப்பெண்ணாக என் கரம் பற்றியவள். என் இல்லத்தை மகிழ்ச்சியின் உறைவிடமாக ஆக்கியவள். மகளுக்கு வழிகாட்டியாக விளங்கி நல்லதொரு வாழ்க்கையை அமைத்துக் கொடுத்தவள். மகனை ஊக்குவித்து வாழ்க்கையில் முன்னேறப் பாதையமைத்துக் கொடுத்தவள். இப்போது... அவர்கள் வாழ்க்கை அவர்களுக்கு. நாங்கள் மீண்டும் தனிமையில். எங்களுக்குத் துணையாக இருப்பவை - கடந்த காலத்தின் இனிமையான நினைவுகள். மற்றும் ஸ்ரீராமில் உள்ள எங்கள் சேமிப்பு தரும் நிலையான பாதுகாப்பு.

ஸ்ரீராம் — லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பதில் முன்னணி நிறுவனம். அளிக்கும் கடனுதவியை 100 சதவிகிதம் திரும்பப் பெற்று விடுவதால் பணத்துக்கு மிகுந்த பாதுகாப்பு. ரூ.190 கோடிக்கும் கூடுதலான டெபாசிட் ஆதாரம். பின்பலமாக ரூ.700 கோடி சொத்து மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்கள். சிறந்த முறையில் உங்களுக்குச் சேவையளிக்க நாடு முழுவதும் 65-க்கும் மேற்பட்ட அலுவலகங்கள்.

For statutory details please refer to our advt. in The Hindu dated 9.7.93.

ஸ்ரீராம் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட்
ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிமிடெட்
ஸ்ரீராம் சிடியூனியன் ஃபைனான்ஸ் லிமிடெட்

டெல்கோ, அசோக்லேலண்ட், சிடியூனியன் வங்கி ஆகிய நிறுவனங்களின் ஈக்விடி பங்கேற்புடன்.

நிர்வாக அலுவலகம்: மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 4 லேடி தேசிகா ரோடு, மயிலாப்பூர், சென்னை 600 004. போன்: 4990960, 4991363, 4993968.

**டெபாசிட்டுகள் திரட்டும் கேம்பெய்ன் இப்போது**



**அதைவிட உங்கள் அக்கறைகளையும் உணர்ந்தவர்கள்.**

# வட்ட மேஜை

## சிரிக்க வைத்த கார்ட்டூன்!

♦ 'உ.பி. எரிமலை வெடிக்கிறது' தலையங்கம், மைய அரசின் மௌனத்தைப் படம் பிடித்துக் காட்டியுள்ளது. உ.பி. மாநில காங்கிரஸ் கட்சித் தலைவர் திவாரியின் கோரிக்கை ஏற்கப்பட்டு, உ.பி. அரசை டிஸ்மிஸ் செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்கிற போது, தயக்கம் காட்டுவது ஏன்? மக்கள் நலனுக்குப் பாடுபடுவதை விட ஆட்சியைப் பிடிப்பதே எல்லோருக்கும் இலக்காகி, அதற்காகவே உழைக்கிறார்கள். மக்கள் புரிந்து கொள்ளும் காலம் வெகுதூரத்தில் இல்லை.

சென்னை - 54, க. நடராசன்.

♦ டெலிவிஷனே கதியாகிப் போய் விட்ட இன்றைய சமுதாயச் சூழலை வெகு தெளிவாக அலசி ஆய்வாக்கியிருந்த விதம் நன்று. குறிப்பாக சன் டி.வி.யில் "டிக் டிக் டிக்" நிகழ்ச்சியின் அர்த்தமற்ற போட்டியையும், அவசியமற்ற தண்டனையையும் துல்லியமாகச் சுட்டிக்காட்டியது வரவேற்புக்குரிய விஷயம்.

கோவை - 6,

இல. ராஜகோபால்.

♦ பையனின் படிப்பை எண்ணி கேபிள் கனெக்ஷனைத் துண்டித்து விட்டோம்! தூர்தர்ஷனைக் கூட செய்திகளுக்காகவே திருப்புகிறோம்! மொத்தத்தில் டீவியை எங்களுக்கு அடிமையாக வைத்துள்ளோமே தவிர, அதற்கு நாங்கள் அடிமையாகி விடவில்லை!

மதுரை - 9,

இரா. கல்யாணசுந்தரம்.

♦ ஆசியாவிலேயே மிகப் பெரிய ஸ்டுடியோவெல்லாம் இருள் கவிழ்ந்து கிடக்க, ஜெ.யின் திரைப்பட நகர் எத்தனை நாளைக்கு பிரயோஜனப்படப் போகிறது? மக்களின் வரிப்பணம் இப்படிச் சீரழிய வேண்டுமென்றால் தமிழகத்தின் தலைவிதி இவ்வளவுதான் என்று நினைத்துக் கொள்ள வேண்டியதுதான்!

சீர்காழி, வி. வெங்கட்.

♦ 'இமைக்காத இரவு' தொடரை நான்கே வாரங்களில் 'நச்'சென்று விறுவிறுப்புடன் எடுத்துச் சென்று, எதிர்பாராத முடிவைக் கொடுத்து அசத்தி விட்டார் பட்டுக் கோட்டை பிரபாகர்.

நெல்லிக்குப்பம், தமிழ்ப்பரிதி.

♦ நாலு வாரத் தொடர் நாலு கால் பாய்ச்சலில் ஓடி முடிந்தாலும் எந்த ஒரு மில்லி மீட்டரிலும் விறுவிறுப்புக் குறையவில்லை. ஆனாலும் மிஸ்டர் ப.கோ.பி. உங்களுக்கு ஒரு கேள்வி. "கற்பழிக்கப்பட்ட பெண் தற்கொலை செய்து கொண்டுதான் தனது உத்தமித்தனத்தை நிரூபிக்க வேண்டும்" என்ற சினிமா செண்டிமெண்ட்டை நீங்களும் கையாளத்தான் வேண்டுமா?

சிதம்பரம், என். சுந்தரி.

♦ இமைக்காத இரவு எதிர்பாராத முடிவு. நான்கு வாரங்களாக - சம்பவங்களை நகர்த்திச் சென்ற விதம் அருமை. வெல்டன்!

பரமக்குடி, வே. ஈஸ்வரன்.

♦ தமிழக செய்தி திரைப்படப் பிரிவின் ஆரம்பத்தில் முன்பு அண்ணா சமாதியையும் இடையில் கலைஞர் ஆட்சியில் வள்ளுவர் கோட்டத்தையும் இப்போது எம்.ஜி.ஆர். சமாதியையும் காட்டுவதாகச் செய்தி வெளியிட்டு இருக்கிறீர்களே? இது என்ன பிரமாதம், "அம்மாவின்" ஆட்சியே நிரந்தர ஆட்சியாகி விட்டால், "ஜெ" திரைப்பட நகரையோ (அல்லது) "போயஸ் கார்டனை"யோ காட்டினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

மன்னார்குடி, எம். ரேவதி.

♦ 'ராவ்'விடம் 'ஜெ' நாதஸ்வரம் வாசிக்கும் படியான (உலகத் தமிழ் மாநாட்டிற்கு அழைப்பு) கார்ட்டூன் என்னை 'சட்'டென்று சிரிக்க வைத்து விட்டது.

இராமேஸ்வரம்,

மு. முருகேசன்.

♦ வார்த்தைகளால் கூட மற்றவர்களை நிந்திக்கக் கூடாதெனும் பாலிஸியை, இறுதி வரை கடைப்பிடித்து இறவாப்புகழ் பெற்று விட்டார், 'டணால்' தங்கவேலு! கௌரவ அஞ்சலி.

சென்னை - 1,

ஏழுகிணறு எஸ். பாலாஜி.

♦ உச்சிப் பிள்ளையாரை எத்தனை முறை தரிசனம் செய்திருப்பீர்கள் என்ற கேள்விக்கு, 'பக்தி என்பது குறிப்பிட்ட ஒரு தலத்திலுள்ள தெய்வத்தையோ அதனை வணங்குகிற எண்ணிக்கையையோ அடிப்படையாகக் கொண்டது அல்ல' என்ற தராகவின் பதில் நூற்றுக்கு நூறு உண்மை. வீட்டிலேயே இருந்து மனசை ஒருமைப்படுத்தி, சாமி படங்களை வணங்கினால் அதுவும் பக்தி தான்.

கோயமுத்தூர்,

கோ. கல்யாணசுந்தரம்.

கனவு மெய்ப்படும்

# எங்கும் வெற்றி பெறுவோம் 8

சுகி சிவம்

உடம்புக்கு உணவு போலவே உயிருக்கும் உணவு தேவை என்று நாம் எப்போதாவது யோசித்தது உண்டா?

உயிருக்கு எது உணவு? நல்ல சிந்தனைகள். நல்ல எண்ணங்கள்.. இவைதாம் உயிருக்கு உணவு. இவை மீண்டும் மீண்டும் எண்ணப்படும்போது நோய்வாய்ப்பட்ட மனம் சீரடையும். வாழ்வில் உயர்ந்த மகான்கள், ஞானிகள் அறிவுரைகளை அடிக்கடி கேட்கிறபோது, நமது குழப்பம் நீங்கி, தெளிவு பெற்று வாழ்க்கையின் சவால்களைச் சந்திக்கிற மனோதிடம், நம்முன் உருவாகிறது.

பெரியவர்களையும் உறவினர்களையும் கொல்லுவதா என்று குழம்பித் தளர்ந்த அர்ச்சுனனுக்குத் திரும்பத் திரும்ப கண்ணன் சொன்ன தெளிவுரைகள், அவனைச் செயலில் செலுத்தின. அந்த கீதை அருச்சுனனுக்காக மட்டும் ஓதப்படவில்லை. அருச்சுனனைக் காரணமாக்கிக் கொண்டு மனிதகுலம் முழுமைக்கும் அது வழங்கப்பட்டது.

உலகில் பல பேர் நிகழ்காலத்தில் வாழ்வதே இல்லை. கடந்த காலம் பற்றிய கழிவிரக்கத்திலும் எதிர்காலத்தைப் பற்றிய ஏக்கங்களிலும் தங்கள் காலத்தை விரயமாக்குகின்றனர். கிடைத்திருக்கும் பொன்னான நிகழ்காலத்தில் வாழ்ந்து பழக வேண்டாமா? கவலைகளையும் துயரங்களையும் தூக்கி எறிந்து, வாழ்வின் பிரச்னைகளை எதிர்கொண்டு வாழப் பழகும் வாழ்க்கைக் கலையே யோகமாக வர்ணிக்கப்படுகிறது.

மனத்தின் சமநிலையே வாழ்க்கைக் கலையின் முக்கிய அம்சம். இன்பத்திற்கு இன்பப் படாமல், துன்பத்திற்குத் துன்பப்படாமல், மனத்தின் சமநிலை பாதிக்கப்படாத



சாந்தம், வாழ்வின் எல்லாச் செயல்களின் மையமாகவும் அமைவது அவசியம். சுகமும் துக்கமும், லாபமும் நஷ்டமும், வெற்றியும் தோல்வியும் சமம் என்று நினைத்துப் போருக்காகவே போர் செய். அப்போது பாவம் வந்து உன்னை அடையாது என் கிறார் கண்ணன், கீதையில்.

இது போருக்கு மட்டுமே பொருந்தும் என்பதில்லை; வாழ்க்கைப் போராட்டத்தின் எல்லா நிலைகளுக்குமே பொருந்தும். தசரத ரால் ராஜ்யம் தரப்பட்ட போது ராமன் ஆனந்தக் கூத்தாடவில்லை. கைகேயியால் அது பறிக்கப்பட்ட போதும் அவர் கண்ணீர் உகுக்கவில்லை. சமநிலை மாறாத ஞானியாக 'சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரையாக' விளங்கியதைக் கம்பன் விளக்கி இருக்கிறார்.

தசரதரால் ஆட்சி தரப்பட்ட போதும், கைகேயியால் பறிமுதல் செய்யப்பட்ட போதும் பெற்றோருக்குக் கீழ்ப்படிதல் என்ற கடமை உணர்வு மட்டுமே அந்தப் புருஷோத் தமனுக்கு இருந்தது. அது போல் இராவண னைப் போர்க்களத்தில் வீழ்த்தும் போதும், புகழ் வேட்கையோ இலங்கையை ஆளும் வெறியோ இராமனுக்கு இல்லை. மனைவியை மீட்பது என்ற தனிமனிதக் கடமையும், அநீ தியை அழிப்பது என்ற சமுதாயக் கடமை யும் மட்டுமே அவரைச் செயலில் தூண்டி யது. எனவே சமநிலை என்ற சாந்த உணர்வு வாழ்வின் எல்லா நிலைகளிலும் அவசிய மானது.

“பலாப்பழத்தை அறுக்கிறவர்கள் அதன் பசையில் இருந்து தப்புவதற்கு ஓர் உபாயம் செய்வது உண்டு. கையில் எண் ணெய்யைத் தடவிக் கொண்டு, பலாப்பழத்தைப் பிய்த்துச் சுளை எடுப்பது போல, ஈஸ்வர சிந்தனையை மனத்தில் வைத்துக் கொண்டு உலக விவ காரங்களில் ஈடுபட்டாலும் சிக்கல் வராது” என்கிறார் பகவான் ராமகிருஷ்ணர்.

மனம் சமநிலை அடைந்த பிறகு, உள்ளத் தில் பிறக்கும் தெய்வீகத் தூண்டுதலால் நாம் செயற்படுகிறோம். எனவே அந்தச் செயற் பாடுகளுக்குப் பொறுப்பேற்க வேண்டியது தெய்வமே. இந்த நிலை கைவரப் பெற்ற வர்கள் சுகம், துக்கம், விருப்பு வெறுப்பு, ஏன் நன்மை தீமை என்ற நிலைகளையெல்லாம் கடந்து விடுகிறார்கள்.

“நன்றே செய்வாய்; பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே”
என்கிற திருவாசகமும் -
“நன்றே வருகினும் தீதே விளைகினும் நான்
அறிவது ஒன்றேயும் இல்லை”
என்ற அபிராமி அந்தாதியும் -
“நன்மை தீமைகள் ஒன்றும், அறியேன்
நமோ நாராயணா”
என்னும் ஆழ்வார் அமுத வாக்கும், இந்த அனுபவத்தின் வெளிப்பாடுகளே.

எட்டு மணிக்கு விமானம். ஆறு மணிக்கே வர வேண்டிய டிரைவர் வர வில்லை. தாமதமாக வந்தார். வந்து பிறகு வண்டியை எடுத்தவர் நடுவழியில் டயர் பஞ்சர் என்று முதலாளியை நிறுத்தி வைத்து விட்டார். 'எமன் மாதிரி எனக்கு வந்து வாய்த்தாயே' என்று புலம்பினார் முதலாளி. எங்கிருந்தோ வந்த நண்பர் தமது காரில் ஏற்றிக் கொண்டு வந்து விமான நிலையத்தில் விட்டு விட்டுப் போனார். 'கடவுள் மாதிரி காப்பாற்றி விட்டாய்' என்று நண்பரை வாழ்த்தினார் நம்மவர்.

ஆகாயத்தில் பறக்கும் போது அறிவிப்பு வந்தது. எஞ்சின் கோளாறு காரணமாக விமானம் தீப்பிடித்து விட்டது என்றார்கள். ஐயோ... நடுத்தெருவில் நிறுத்தினாலும் கார் டிரைவர் கடவுள் மாதிரி உயிரைக் காப் பாற்றி இருந்தாரே... எமன் மாதிரி நண்பர் வந்து விமானத்தில் ஏற்றி விட்டாரே” என்று நொந்து கொண்டார். அரைமணி நேர அவ காசத்தில் கடவுள் எமனாகிறார். எமன் கடவுளாகிறார். நன்மை தீமையானது. தீமை நன்மையானது!

எனவேதான், நன்மை விளையுமா தீமை விளையுமா என்கிற முடிவுகளை இறைவ னிடம் விட்டு விட்டு, நாம் கடமையை மட் டுமே செவ்வனே ஆற்றப் பழக வேண்டும் என்பது. அப்போது துக்கம் ஒருபோதும் நம்மை அணுகுவதில்லை.



“பத்து வருஷமானாலும் இந்தப் புடைவை சாயம் போகாது கிழியாது...!”

“அதெப்படி அவ்வளவு உறுதியா சொல்றீங்க?”

“பத்து வருஷமா எங்க கடையில தான் இருக்கு; சாயம் போகலை கிழிய லையே...?!”

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

# EXPRESS FINANCIAL EXCHANGE LTD.

# வழங்குகிறது
# பரபரப்பான டெபாசிட் திட்டங்கள்

| | |
|---|---|
| எக்ஸ்பிரஸ் ஏர்னிங்ஸ்<br>1<br>(EXPRESS EARNINGS) | மணி பேக்<br>2<br>(MONEY BACK) |
| ஃபேமிலி டிரஸ்ட்<br>3<br>(FAMILY TRUST) | சைல்ட் கேர்<br>4<br>(CHILD CARE) |

[illegible]
Integrated Enterprises (India) Ltd [illegible]
[illegible]

எல்லாத் திட்டங்களுமே உடனடியாக ரொக்கம் பெறும் வசதியும் உங்கள் டெபாசிட்டுகளை எளிதில் கையாளும் வசதியையும் அளிக்கின்றன. மேலும்...

1. டெபாசிட்டுகளின் பேரில் கடன் வழங்கும் வசதி.
2. டெபாசிட்டுகளை குறித்த காலத்திற்கு முன்பே திருப்பி எடுத்துக்கொள்ளுதல்.
3. ஒவ்வொரு நிதியாண்டிற்கும் பின்தேதியிடப்பட்ட மாதாந்திர/காலாண்டு வட்டி வாரண்டுகள் முன்கூட்டியே அனுப்பப்படும்.

---

| | |
|---|---|
| வழங்குகிறது எளிதான கடன் உதவி | ரூ.10,000/- (பத்தாயிரம் வரை) குறைந்த வட்டியில் பணியில் இருக்கும் மகளிருக்காக. |
| | 25 வயது வரையிலுள்ள மாணவர்களின் கல்விக்காக - பணியில் இருக்கும் மகளிருக்காக. |

எங்களுடன் தொலைபேசியில் அல்லது கடிதம் மூலம் தொடர்பு கொள்ளவும்

**எக்ஸ்பிரஸ் ஃபைனான்ஷியல் எக்ஸ்சேஞ்ச் லிட்.**
கார்ப்பரேட் அலுவலகம்: அட்வேல் டவர்ஸ்,
9, தெற்கு போக் சாலை, சென்னை - 600 017.
போன் : 4340325/4340329/4341403. ஃபேக்ஸ்: 4341518

18.6.94 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் பத்திரிக்கையில் எங்களது சட்டபூர்வமான விளம்பரத்தைப் பார்க்கவும்.

Trinity EFE2012.5



# பத்து நிமிடம் செலவிடுங்கள்; புத்தம்புது டைரீ பெறுங்கள்!

தீபாவளி வாழ்த்துக்கள்! இந்த கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். பத்தே நிமிடங்கள்தான் ஆகும். கூப்பன் அனுப்புவோரில் ஐம்பது பேருக்கு 1995 ஆம் ஆண்டு டைரி பரிசு. பரிசுக்குரியவர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். தவிர, கூப்பனின் இறுதிப் பகுதியில் எழுதப்படும் விமர்சனங்களுள் சிறந்த ஐந்து விமர்சனங்களுக்குச் சிறப்புப் பரிசு! பரிசுகள் விஷயத்தில் ஆசிரியர் முடிவே இறுதியானது. முடிவு தேதி: 15.11.94.

பெயர் :

வயது :

படிப்பு :

முகவரி :

கையொப்பம்:

தொழில்/அலுவல் :

குடும்ப வருமானம் :

என்னென்ன பத்திரிகைகள் தொடர்ந்து வாங்குகிறீர்கள் அல்லது சந்தா செலுத்துகிறீர்கள்:

கல்கியைத் தொடர்ந்து படிக்கிறீர்களா? ஆம் ☐ இல்லை ☐

(உரிய கட்டத்தில் ✓ செய்யுங்கள்)

கல்கி எப்படி கிடைக்கிறது : லைப்ரரி மூலம் ☐ சந்தா செலுத்துவதால் ☐ கடையில் வாங்குவதால் ☐ இரவல் ☐

சுமார் எத்தனை பேர் ஒரு கல்கி இதழைப் படிக்கிறீர்கள்?

1-3 ☐ 4-6 ☐ 6-8 ☐ 8-12 ☐ 12 க்குமேல் ☐

**உள்ளடக்கம்**

கல்கி வாங்கியவுடன் எதைப் படிக்கிறீர்கள்?

கல்கியில் பிடிக்காத/போரடிக்கும் பகுதி எது?

கல்கியில் அதிகம் பிடித்த பகுதி எது?

தொடர்கதைகள் ☐ சிறுகதைகள் ☐ கேள்வி பதில் ☐ ஜோக்-துணுக்கு ☐

கட்டுரைகள் ☐ சினிமா ☐ தலையங்கம் ☐ அருள்வாக்கு ☐ எல்லாமே ☐

நீங்கள் எதிர்பார்க்கும் புதிய பகுதி எது?

ஜாலியான சிரிப்புப் பகுதி அதிகம் வேண்டுமா? ஆம் ☐ இல்லை ☐

சினிமா செய்திகள் அதிகம் வேண்டுமா? ஆம் ☐ இல்லை ☐

அரசியல் கட்டுரைகள் அதிகம் வேண்டுமா? ஆம் ☐ இல்லை ☐

யார் தொடர்கதை வெளியானால் விரும்புவீர்கள்?

**வடிவமைப்பு**

எந்த பத்திரிகையின் அட்டை உங்களை அதிகம் கவர்கிறது?

உங்களைக் கவரும் அந்த அட்டையை ஒப்பு நோக்க,
கல்கி அட்டை எப்படி? ஜோர் ☐ சுமார் ☐ மோசம் ☐

எந்த பத்திரிகையின் எழுத்து நடை அதிகம் பிடிக்கிறது?

கல்கி நடை மேற்படி பத்திரிகையுடன் ஒப்பிட்டால்?

சூப்பர் ☐ தேவலாம் ☐ அறுவை ☐

இந்த இதழ் கல்கி பற்றிய நான்கு வரி விமர்சனம் :



# காங்கிரஸைத் தலைநிமிர்த்திய விழா!

●● ''தொண்டன் எங்கேய்யா இருக்கான்?'' என்று மாற்றுக் கட்சியினரால் கிண்டல் செய்யப்பட்டு வந்த தமிழக காங்கிரஸ் இனி தலையை நிமிர்த்திக் கொள்ளலாம். ராஜீவ் காந்தி பொன் விழாவையும், ராஜசேகரன் தலைமையில் ஜனதா தளத் தொண்டர்கள் காங்கிரஸில் ஒன்றாக இணைவதையும் சேர்த்து, ஊர்வலம், பொதுக் கூட்டம் என்று வாழப்பாடி தலைமையில் கடந்த 15-ம் தேதி மதுரையைக் கலக்கினார்கள் காங்கிரஸ் தொண்டர்கள்.

●● அரசியல் ஊர்வலத்துக்குரிய எல்லா சமாசாரங்களும் காங்கிரஸ் ஊர்வலத்திலும் இருந்தன. மயிலாட்டம், ஒயிலாட்டம், புலியாட்டம் (வாழப்பாடிக்கு பிடிக்காவிட்டால் கூட), பொய்க்கால் குதிரை ஆட்டம், டண்டணக்கா ஆட்டம் என்று எதிலும் குறைவில்லை! ஜெ.யின் அறுபதடி கட்-அவுட்களையே பார்த்துப் பழகிப் போன கண்களுக்கு ஒரு மாறுதல். காமராஜர், நரசிம்ம ராவ், சோனியா, வாழப்பாடியார், அர்ஜுன்சிங், ராஜேஷ் பைலட் ஆகியோர் ஜம்போ சைஸில், மதுரைத் தெருக்களை ஆக்ரமித்தார்கள்.

●● பெரிய விளக்குத் தூண் அருகே இருந்த காமராஜ் சிலைக்கு கதர் வேட்டி, கதர்ச் சட்டை போட்டு விட்டிருந்தது தத்ரூபம்.

●● ஊர்வலத்தில் வந்து கொண்டிருந்த தொண்டர் ஒருவர், தலைவர்கள் பார்வையிட்டுக் கொண்டிருந்த மேடையருகே வரும் போது, உற்சாக மிகுதியில் ஒரு கட்டி கற்பூரத்தைக் கையில் ஏற்றி திருஷ்டி சுற்றிப் போட்டது மற்றவர்களை அசத்தி விட்டது.

●● பேரணியில் வந்த தொண்டர்களில், பாதிப் பேர் பொதுக் கூட்டத்தில் மிஸ்ஸிங். தெருவோர இட்டலிக் கடைகளில் சாப்பிட்டு விட்டு, ஊரைப் பார்க்க விரைந்து விட்டார்கள்.

●● பஸ், லாரிகளில் டான்ஸ் ஆடிக் கொண்டு வரும் தொண்டர்கள், மேலே உள்ள மின்சார கம்பிகளைத் தொட்டு விடப் போகிறார்களே என்ற பயத்தில் அவர்களை எச்சரிப்பதிலேயே அதிக கவனத்தை எடுத்துக் கொண்டார் வாழப்பாடியார்.

●● ஊர்வலம் ஓர் இடத்தைக் கடக்க மூன்றரை மணி நேரம் பிடித்தது என்பது காங்கிரஸ் வரலாற்றில் ஒரு முக்கியமான குறிப்பு. அர்ஜுன்சிங் கையை ஆட்டி ஆட்டிக் களைப்பாகி உட்கார்ந்து விட்டார்.

●● மூன்று நாட்கள் தொடர்ந்து மாலையில் படாதபாடுபடுத்திக் கொண்டிருந்த மழை, வாழப்பாடிக்காக கேஷுவல் லீவ் எடுத்துக் கொண்டிருந்தது. ஆனாலும், பொதுக் கூட்டம் நடந்து கொண்டிருக்கும் போது அவ்வப்போது 'மேலிருந்து' பயமுறுத்தல்கள் வந்து கொண்டிருந்தன. "இந்தத் தூறலுக்கே பயந்தால் ஜெயலலிதா ஆட்சியை எப்படி விரட்டுவது? நீங்கள் நனைந்தால் நாங்களும் நனைவது என்ற ஏற்பாட்டின் காரணமாகத்தான் கூரையில்லா மேடை இங்கு போடப்பட்டிருக்கிறது'' (காங்கிரஸில் இதுவும் ஒரு புதுமைதான்) என்று ஒரு போடு போட்டு, கூட்டத்தை உட்கார வைத்தார் இணைச் செயலாளர் சக்தி வடிவேல்.

●● வாழப்பாடியைப் பதவியிலிருந்து நீக்கக் கூடாது என்றும், அ.தி.மு.க.வுடன் கூட்டணி வைக்கக் கூடாது' என்றும் மேலிடத்திற்கு அர்ஜுன்சிங் மூலம் ஆங்கிலத்தில் செய்தி கொடுத்தார் பாராளுமன்ற உறுப்பினர் ராஜேஸ்வரன்.

●● ரொம்ப ஆச்சரியமானதும், பாராட்டும்படியாகவும் நடந்த ஒரு விஷயம், விழாக்களை வாழ்த்தி மூப்பனார் செய்தி அனுப்பியிருந்ததுதான்.

●● ராஜசேகரன் போன்ற அமைப்பாளர்கள் கிடைத்திருப்பது வாழப்பாடியின் அதிர்ஷ்டம்தான். அந்த சந்தோஷம் வாழப்பாடியின் முகத்தில் வெளிப்படையாகவே தெரிந்தது.

— ப்ரியன்



அர்ஜீன்சிங் மனித வளத்தைப் பார்த்துட்டார்; மேம்பாட்டை எப்ப பார்ப்பாரோ?


அரசியல் விளையாட்டுக்கள்
சுலபமா தூக்கிட்டேன்! இறக்கி வைக்கத்தான் தெரியலே!
பளு தூக்கும் போட்டிக்கு 'ஜெ'!
ஸ்லோ சைக்கிள் ரேஸூக்கு ராவ்
சபாஷ்! போட்டியின்றி வெற்றி!
வாக்கிங் ரேஸ்
இந்த டீமை பீட் பண்ண யாராலும் முடியாது!
வை.கோ.
குமரி அனந்தன்
இந்தாப்பா! உனக்கு மட்டும் ஹாண்டிகாப் தரமுடியாது; எல்லாரோடயும் சேர்ந்து லைன்ல நில்லு!
ரெ.:.ப்ரி மன்மோகன்சிங்
தனியார் துறை
அரசுத் துறை


போல் வால்டுக்கு
சு. சுவாமி
கபடிக்கு கருணாநிதி
கபடி கபடி சாட்சி சொல்வேன்... மாட்டேன்.. கபடி கபடி உடம்பு சரியில்லை... சரியாயிருக்கு... கபடி கபடி...
சந்தர்ப்பவாதமும்
சமயோசித பேச்சும்
அரசியல் ஆதாயம்
அதிகத் தங்கம் பெற...
பாக்ஸிங் ரிங்குக்கு சேஷன்
ரிங்கை விட்டு இறங்க மாட்டேன்; இறங்கவும் முடியாது; கடவுளா பார்த்து இறக்கணும்னு ஆசைப் படறாங்க!
தண்டாலுக்குத் தமிழக அமைச்சர்கள்!
இந்த கட்அவுட் இருந்தாதான் ஜெயிக்க முடியும்கிறாங்களே அதான் புரியலை!



# நம்பர் 6 துர்க்கை ஃபிளாட்ஸ்

— ஜக்கு

"எக்ஸ்கியூஸ் மி மேடம்."

"எஸ்?"

"இது உங்களுக்கே நல்லா இருக்கா? இப்படி. நடுராத்திரில பேய் மாதிரி டேப்பை அலற விட்டு தொம்தொம்னு குதிச்சா - மத்தவங்க தூங்க வேணாம்?"

"மைண்ட் யுவர் வேர்ட்ஸ். நாட்டியம் புனிதமான விஷயம். குதிக்கறது அது இதுன்னு கொச்சைப்படுத்தாதீங்க."

"நாட்டியம் புனிதமானதா இருக்கட்டும். தூக்கம் அதைவிடப் புனிதமானது அம்மணி."

"அதுக்கு நான் என்ன செய்ய? பஞ்சு அடைச்சிட்டுப் படுங்க. ஸண்டேல உங்க வீட்டுலேருந்து வர்ற கவுச்சு வாடையை நாங்க பொறுத்துக்கலை?"

"வேணும்னா நிறுத்திடறேன்."

"பட், ஐ கான்ட் ஸ்டாப்."

"கிழிஞ்சுது."

"வாட்?"

"தயவுசெய்து புரிஞ்சுக்கங்க. இல்லை, விளைவுகள் விபரீதமா இருக்கும்."

"பயமுறுத்தறீங்களா?"

'சே' என்று வந்து விட்டான்.

தொடர்வதான நாட்களில் அவள் நடனம் வெகு உக்கிரமடைய ஆரம்பித்தது. வம்பு விரும்பி. காலை, மாலை, இரவு, நள்ளிரவு என்று நேரம் கிடைக்கும்போதெல்லாம் வஞ்சிக்கோட்டை வாலிபன் வைஜயந்திமாலா மாதிரி ரகளை பண்ணிக் கொண்டிருந்தாள்.

நேர் கீழ் ஃபிளாட் என்பதால் ஜகன்னாதனின் நியாயமான சோகம் இதர மனுஷர்களுக்கு அத்தனை ரீச் ஆகவில்லை.

"ஆடிட்டுப் போகட்டும், விடுங்க சார்! நாளைக்கே அவங்க ஒருவேளை ஸ்டார் டான்ஸராயிட்டா சொல்லிக்கலாமில்லை, எங்க ஃபிளாட்லதான் இருக்காங்கன்னு?" - அதிகாலை தண்ணீர்பிடிக்கையில் ஜொள் விடும் பலராமன். எம்.ஏ.எஸ். மரமேறி.

ஜெகன்னாதன் தன் உக்கிரங்களையெல்லாம் விடுத்து, கெஞ்சியும் கேட்டுப் பார்த்தான்.

"ப்ளீஸ் மேடம். கனவு கூட காளி ஆடற மாதிரி வருது. இந்த அபலையை ஆட்கொண்டருளுங்கள்."

ஒரு நீண்ட உபன்னியாசத்தின் முடிவில் ஜகன்னாதனின் அம்மா 'துஷ்டனைக் கண்டால் தூர விலகு' என்று மணிமொழியவே, ஒரு சுபநாளில் ஜகன்னாதன் வேறு ஃபிளாட்டில் குடி மாறினான். அது, நம் கதாநாயகி வெளியூர் போயிருந்த சமயம்.

முதல் நாள்.

இரண்டாம் நாள்.

மூன்றாம் நாள்.

தொந்தரவில்லாத உறக்கம். ஜதி இல்லை. குதி இல்லை. கடவுளுக்கு நன்றி.

பஸ் ஸ்டாண்டில் ஜகன்னாதன் காத்திருந்தான். கும்பல். கும்பல். மேலும் கும்பல். சட்டென்று அவள் கண்ணில்பட்டாள். வஞ்சிக்கோட்டை வாலிபி.

"ஹலோ ஸார், எப்படி இருக்கீங்க?"

ஹிஹி. தத்துபித்து.

"ஊருக்குப் போயிருந்தேன், ஒரு வாரமா. நிம்மதியா தூங்கியிருப்பீங்களே."

"ஆஹா."

"இனி தினமும் நிம்மதியா தூங்கலாம். என்னால் பிராப்ளம் இருக்காது. பை தி பை, நாங்க வீடு மாத்தறோம்."

"சந்தோஷம். நாங்க ஏற்கெனவே மாறியாச்சு. நம்பர் ஸிக்ஸ் துர்க்கை ஃபிளாட்ஸ்."

"வாட் எ ஸர்ப்ரைஸ்?"

"அதென்ன?"

"நாங்களும் அங்கதான் வர்றோம். ஃபர்ஸ்ட் ஃப்ளோர். நீங்க கிரௌண்ட் ஃப்ளோரா?"

# நினைவலைகள்

13

## கே. பாலசந்தர்

**CAN WE AS FILM MAKERS BRING OUT MORE DRAMA, MORE POIGNANCY, MORE PAIN, AND MORE VAGARIES OF LIFE IN OUR FILMS? WE CANT; WE CANT COMPETE WITH REALITIES.**
**- A JAPANESE FILM MAKER**

நேற்று!

பழைய நாடக ஃபைல் ஒன்றைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காக எனது அலுவலகத்து 'கோடவுன்' அறைக்குச் சென்றேன். நூற்றுக் கணக்கான ஃபைல்கள்; சின்னதும் பெரிதுமான படப்பிடிப்பில் உபயோகப்படுத்தும் உபரி கருவிகள், சாமான்கள், பொம்மைகள் படங்கள்... ஆணிப் பெட்டியிலிருந்து பழைய போட்டோ ஆல்பங்கள் வரை! புழுதி படிந்த ஒரு ஃபைலைத் தட்டி இழுத்தேன்.

படப்பிடிப்பின் போது உபயோகப்படுத்தப்படும் ஒரு பழைய 'கிளாப் போர்டு' கீழே விழுந்தது.

எனது கண்கள் அந்த கிளாப் போர்ட்டுக்கு Zoom செய்தது. அதில் 'Zarase zindagi' என்று எழுதப்பட்டிருந்தது. எனது 'வறுமையின் நிறம் சிவப்பு' படத்தின் இந்தி வடிவத்தின் தலைப்பு அது. அந்தப் படத்திற்கு உபயோகப்படுத்தப்பட்ட கிளாப் போர்டு அது. அதில் "காட்சி 72; பாடல் 3; ஷாட் 38 டேக் I" என்று சாக்கட்டியினால் எழுதப்பட்டிருந்த எழுத்துக்கள் பாதி அழிந்தும் அழியாமலும் என் கண்களுக்குப் புலப்பட்டன; எனது சிந்தனையில் சட்டென்று ஒரு தீப்பொறி. நினைவுகள் எங்கோ இழுத்துச் செல்லப்பட்டன.

1982ம் வருடம்; மே மாதம்; அந்த ஆறாம் தேதி! That fateful day.

எனது பேனாவை இந்த 'கிளாப் பலகை'யிடம் சிறிது நேரம் கடன் கொடுக்க என்னை அனுமதியுங்கள்.

Clap Board தொடர்கிறது :

மரத்தினாலான கரும்பலகை நான். என்னைப் பற்றித் தெரியாதவர்களே திரையுலகில் இருக்க முடியாது; அது பெரும் புள்ளிகளாக இருந்தாலும் சரி; கடைநிலை திரைப் படத் தொழிலாளியாக இருந்தாலும் சரி!

திரைப்படம் எடுப்பதற்கு இன்றியமையாத முதல் சாதனம் நான்தான்!

மூலதனம் கூட பிறகுதான்!

ஒவ்வொரு காட்சி சுடப்படும் போதும், அந்தந்த காட்சியின் எண்ணிக்கைகளையும், ஷாட்டுகளின் தொடர் எண்களையும், அது பகல் காட்சியா இரவுக் காட்சியா, பேசும் வசனக் காட்சியா அல்லது பாடும் 'பிளே பாக்' காட்சியா என்கிற குறிப்புகளையெல்லாம் சுமந்து கொண்டு படத்தை எடிட்டர்கள் தொகுப்பதற்கு வசதியாக ஃபிலிமில் பதிவு செய்து தருகின்ற பெரும் பணியை அடியேன்தான் செய்து வருகின்றேன்.

திரைப்பட ஆரம்ப விழாக்களில் கடவுளர்களின் படங்களுக்குச் சமமாக என்னையும் வைத்துத்தான் ஆராதனை செய்கிறார்கள்; சாம்பிராணி காட்டுகிறார்கள்; ஆரத்தி எடுக்கிறார்கள் என்றால் அது எனக்கு மிகவும் பெருமையாகத்தான் இருக்கிறது. இன்னும் சொல்லப் போனால் திரைப்படங்களைத் தொடங்கி வைக்கவிருக்கும் பெரும் பிரமுகர்கள் முதல் ஷாட் நடிக நடிகையரின் முகங்களை என்னைக் கொண்டு மறைத்திருந்து பிறகு காமிரா இயங்க ஆரம்பித்தவுடன் என்னை இழுத்து நாயக நாயகியின் முகத்தை ஃபிலிமில் பதிவு செய்கிறார்கள். முதல் ஷாட்டில் இன்னார் கிளாப் அடிக்கிறார்கள் என்பதைப் பொறுத்து என் மூலம் அவர்களுக்குப் பெருமையும் பப்ளிசிடியும் கிடைக்கிறது. திரைப்படம் வெளியாகி அது வெற்றிச் சித்திரமாக அமைகின்ற நேரத்திலெல்லாம் 'இன்னாரின்' ராசிக் கரங்களினால் கிளாப் அடிக்கப்பட்டு ஆரம்பித்த படம்; அதனால்தான் சக்கைபோடு போடுகிறது என்றெல்லாம் கூட பேசியும் எழுதியும் கலை நுணுக்க வல்லுநர்களுக்குச் சேராத பெருமையும் புகழும் இவர்களுக்குப் போய்ச் சேருகிறது.

இவ்வளவெல்லாம் இருந்தும் எனக்கு மட்டும் ஒரு



வருத்தமுண்டு. எந்த இடத்திலே எந்த ஷாட்டைப் பொருத்த வேண்டுமென்று என் மீது பதிவாகியிருக்கும் எண்ணிக்கைகளை வைத்துக் கொண்டு எடிட்டர்கள் படத்தைத் தொகுக்கும் போது, நான் ஃபிலிமில் பதிவாகியிருக்கிற பகுதிகளை மட்டும் வெட்டிக் குப்பைக் கூடையில் போட்டு, பட முடிவில் 'வேஸ்ட் ஃபிலிமாக' என்னை சாக்குமூட்டைகளில் கட்டி சந்தைக்கு அனுப்பி, என்னைக் கருவேப்பிலையாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதெல்லாம் உங்களுக்குத் தெரிந்திருக்குமோ என்னமோ, அது எங்கள் வர்க்கத்தின் தலைவிதி. ஆனால் ஒன்று!

ஒரு திரைப்படம் அதன் தொடக்கத்திலிருந்து அது தியேட்டர்களுக்குக் கடைசியில் படச் சுருள்களாகப் பெட்டியில் பத்திரப்படுத்தப்பட்டு அனுப்பப்படும் வரை எங்களுக்குத் தெரியாத, புரியாத எந்த விஷயமும் இருக்க முடியாது என்பது மட்டும் உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

எத்தனை நடிகர்களின் நடிப்பை நாங்கள் கண்டிருப்போம் - எத்தனை நாயகிகளின் முகங்களை நாங்கள் வெகு அருகிலிருந்து கண்ணோட்டம் விட்டிருப்போம். வினாடிக்கு வினாடி முகபாவங்களை மாற்றிக் காட்டும் எத்தனை நடிப்புத் திலகங்களைக் கண்டு நாங்கள் கைதட்டியிருப்போம். இயக்குநர் ஒன்றைச் சொல்ல ஒருவித எக்ஸ்பிரஷனும் காட்டத் தெரியாத எத்தனை முகபாவங்களையும், பாவமுகங்களையும் கண்டு நாங்கள் எங்களுக்குள்ளே சிரித்துக் கொண்டிருப்போம்.

எத்தனை இயக்குநர்களின் சாமர்த்தியத்தையும் நுண்ணிய அறிவையும் சிலருடைய ஏகபோக 'டச்'சுகளையும் நாங்கள் அருகிலிருந்து ஆராய்ந்து வியந்திருப்போம். அதே சமயம் சில நேரங்களில் தொழிலே தெரியாமல் எல்லாம் தெரிந்தது போல் நடந்து கொள்ளும் எத்தனை இயக்குநர்களைக் கண்டு நாங்கள் குறும்புத்தனமாகச் சிரித்திருப்போம்.

ஆகவே திரைப்படத் துறை பற்றியும் அந்தத் துறையிலே நாள்தோறும் தோன்றுகின்ற புதுப்புது பிரச்னைகளைப் பற்றியும் உணர்வுபூர்வமமான சம்பவங்களைப் பற்றியும் விமர்சிக்கின்ற ஒரு தகுதி எங்களுக்கு மட்டுமே உண்டு.

இந்த நேரத்திலேதான் அத்தியாயத்தின் ஆரம்பத்திலே குறிப்பிடப்பட்ட ஒரு ஜப்பானிய இயக்குநர் சொல்லியிருக்கிற கருத்தினை நினைவுகூர்கிறேன் :

"எங்களால் எங்களது உணர்ச்சிகரமான கற்பனைச் சம்பவங்களினால், சில நேரங்களில் வாழ்க்கையில் நடக்கும் நிஜங்களுடன் போட்டி போட முடியாது" என்று கூறியிருக்கிறார் அந்த ஜப்பானிய இயக்குநர். அத்துடன் 'ஹிரோஷிமா'வில் அணுகுண்டு வீசப்பட்டதை உதாரணம் காட்டியிருக்கிறார்.

'கிளாப்' மேலும் தொடர்கிறது :

அதே போல்தான் நினைத்துப் பார்க்க முடியாத அந்தச் சம்பவம்... என் கண்களால் பார்த்த, உண்மையை விட கோரமான, அந்தச் சம்பவம், மே மாதம் ஆறாம் தேதி மாலை 5½ மணியளவில். இமாச்சலப்பிரதேசம் மலைச்சரிவில் கணநேரத்தில் நடந்து விட்ட நெஞ்சைப் பிளக்கும் அந்தக் கோர விபத்து.

இந்தி படத்தின் படப்பிடிப்பை 'வெற்றிகரமாக' முடித்துக் கொண்டு ஊர் திரும்பிக் கொண்டிருக்கும் எங்கள் யூனிட்!

இன்னும் சிறிது நேரத்தில் எங்களைச் சுமந்து வரும் அந்தப் பேருந்து பயங்கரமான ஒரு விபத்திற்குள்ளாகப் போகிறது என்கிற 'தலைவிதி' புரியாமல் கூத்தும் கும்மாளமும் கேலியும் சிரிப்பும் வானைப் பிளக்க... பேருந்தில் பயணம் செய்து கொண்டிருந்த எங்கள் யூனிட்டைச் சேர்ந்த 29 பேர்; புரொடக்ஷன் பெட்டியில் போட்டு அடைத்து வைக்கப்பட்டிருந்த என்னையும் சேர்த்து. கடைசி 'U' வளைவுப் பாதை! அதைக் கடந்து விட்டால் இன்னும் 100 மீட்டர்களில் மலைப்பாதையில்லாத சமவெளிப் பிரதேசத்தை அடைந்திருக்க முடியும்... எல்லாம்... சினிமாவில் நடப்பதைப் போல்தான் என்று கூட கூற முடியவில்லை; அதற்கும் அப்பாற்பட்டு! எதிரில் வருகின்ற ஒரு காரில் மோதுவதைத் தவிர்ப்பதற்காக இடதுபக்கம் ஒடிக்கப்பட்ட அந்த பஸ், அடுத்த வினாடி ஒரு பாறையில் மோதி... மூன்று முறை சரிவிலே உருண்டு, குட்டிக்கரணம் போட்டு, இடதுபக்கமாகக் குடைசாய்ந்து கூச்சல்கள்; அலறல்கள்; மரண ஓலங்கள்! நினைத்தாலே நெஞ்சம் உறைந்து விடும் விபத்தின் அலங்கோலக் காட்சிகள்; எழுதச் சாத்தியமில்லை.

நசுங்கிய மனித உடல்களோடு, உடைந்து சிதறிய புரொடக்ஷன் பெட்டிக்குள்ளிருந்து தூக்கி வெளியே எறியப்பட்ட நான்!

என் மீது ரத்தத் துளிகள்; பல்வேறு குருப்பைச் சேர்ந்த ரத்தத் துளிகள். திரைப்பட கலைநுணுக்க வல்லுனர்களின் ரத்தத் துளிகள்; திரைப்படத் தொழிலாளிகளின் இரத்தச் சிற்றாறுகள். ஆண்டவனுக்குப் பாலாபிஷேகம் போல, என் மீது ரத்த அபிஷேகம். கரும்பலகை சிவப்புப் பலகையாக மாறிக் காட்சியளிக்கிறேன்.

# மூச்சு விட முடியாமல் சிரமப்படுபவர்கள் முழுமையாக நிவாரணம் பெறமுடியுமா?




பண்டைய ஆயுர் வேதத்தின் பல்வேறு குறிப்புகள் சிபாரிசு செய்யும் அரிதான மூலிகைகளின் சிறப்பான கலவை.

தீவிரமான ஆராய்ச்சி மற்றும் பல வருட காலமாக நோயாளிகளுக்கு வெற்றிகரமாகப் பயன்படுத்தி வந்த அனுபவத்தின் அடிப்படையில் உருவானது — **பங்கஜ கஸ்தூரி** அலெர்ஜியான மார்ச் சளி (allergic bronchitis) யூஸ்னோ ஃபீலியா, அடிக்கடித் தும்முதல், தீராத இருமல் மற்றும் இவை போன்ற மூச்சுக் கோளாறுகளிலிருந்து 100% நிச்சய நிவாரணம் கிடைப்பதை நிரூபித்துள்ளது.

## பங்கஜ கஸ்தூரி

தயாரிப்பாளர்கள்:

**ஸ்ரீ தன்வந்த்ரி ஆயுர்வேதிக்ஸ்**
பூவாச்சல், திருவனந்தபுரம் 695 575.
கேரளம்.

(ஆங்கில / ஆயுர்வேத மருந்துக் கடைகள் எல்லாவற்றிலும் கிடைக்கிறது.)

**இப்போது தமிழ்நாடு முழுவதும் கிடைக்கிறது**

ஆயுர்வேதம் சிபாரிசு செய்யும் அரிதான மூலிகைகளின் சரியான கலவை

வியாபார விபரங்களுக்கு:

சூப்பர் ஸ்டாக்கிஸ்ட்: **டிரேட் லைன்ஸ் மார்க்கெட்டிங்**
31, பில்கிங்டன் ரோடு, அயனாவரம்
சென்னை 600 023. போன்: 612169/612427/5323918

Insight-219



# அன்னையின் அணைப்பைப் போலவே பாதுகாப்பானது 'மதர்'

வலுவான தொழில் பின்னணியுடன் கூடிய ஒரு நிதி நிறுவனத்துடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வது எப்போதுமே மன நிம்மதி அளித்திடும்.

அத்தகைய ஒரு சிறந்த நிறுவனம் தான் 'மதர் மீரா ஃபைனான்ஸ் அண்ட் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்.

- ரசாயனப் பொருட்கள், ஆடைகள், மதுபானம், நிதி சேவை ஆகிய பல துறைகளில் ரூ. 500 கோடிக்கு மேல் வர்த்தகம் கொண்ட மாபெரும் தொழில் நிறுவனம் ஒன்றின் துணை நிறுவனம்.
- மோகன் ப்ருவரீஸ் அண்ட் டிஸ்டில்லரீஸ் லிமிடெட் மற்றும் மீரா டெக்ஸ்டைல்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட் நிறுவனங்களை ஸ்தாபித்தவர்களின் குடும்பத்தினர்களால் துவக்கப்பட்டது.
- கனிவான, துரிதமான சேவை - உங்கள் வீடு தேடி வருகிறது.
- முன் - தேதியிட்ட வட்டி காசோலைகள்.

எங்களது சேவைகள் :

- பிக்ஸட் டெபாசிட் திட்டம்
- ஹயர் - பர்சேஸ்
- லீஸிங்
- பில் டிஸ்கவுண்ட்டிங்

## மதர் மீரா ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்

66/5A, ஸ்பர் டாங்க் சாலை, சேத்துப்பட்டு, சென்னை - 600 031.
ஃபோன்: 8261120, 8260386.

**நினைவில் நிலைத்திடும் நல்லுறவு.**

டெபாஸிட்தாரர்களுக்கு அரிய சலுகைகள்
'டெபாஸிட் திரட்டும் பணி' இப்போது முழுமூச்சில்!

குறிப்பு: மாலை மலரில் 13.05.94 அன்று வந்த விளம்பரத்தை தொடர்ந்து இது வெளியிடப்படுகிறது.

**வ**றுமையின் நிறம் மட்டுமல்ல சிவப்பு; கொடுமையின் நிறம் கூட சிவப்புத்தான். துயரத்தின் நிறம் கூட சிவப்புத்தான். என் மீது எழுதப்பட்டிருக்கும் அந்த வார்த்தைகள் தெரிந்தும் தெரியாமலும் மனித ரத்தம் மறைத்துக் கொண்டிருக்கும் வார்த்தைகள்; அவைதான் அந்த இந்திப் படத்தின் தலைப்பு. 'ஜராஸி ஜிந்தகி.'

"A little of life."

"வாழ்க்கையின் ஒரு துளி" என்பது அதன் மொழி மாற்றம்.

வாழ்க்கை எத்தனை சிறியது என்பதையும் பிறந்த ஒவ்வொருவருமே வாழ்க்கையின் ஒரு துளியைத்தான் வாழக் கொடுத்து வைத்திருக்கிறார்கள் என்பதையும் தெள்ளத் தெளிவாகப் புரியவைக்கும் அந்தத் தலைப்பு.

இனிய உருதுக் கவிஞன் குல்ஸார் இப் படத்திற்குக் கொடுத்த தலைப்பு.

அன்று நேரில் கண்ட காட்சி, நெஞ்சை நூறாகப் பிளக்கின்ற அளவுக்கு கற்பனைக் காட்சிகளை விட விநோதமானதுதான்; கொடூரமான விசித்திரம்தான் சில உண்மைகள்.

அயராது உழைக்கும் எங்கள் யூனிட் தொழிலாளி துரைவேலு. ஒரு லைட்பாய். சூரிய ஒளியை நடிக - நடிகையரின் மீது பிரதிபலிக்க வைத்து முகங்களிலே வெளிச்சத்தை ஏற்படுத்தும் அந்தக் கனமான இரும்பு ரிஃப்ளெக்டர்களை ஷாட்டிற்கு ஷாட் இடமாற்றம் செய்ய தோள்களின் மீது தூக்கிச் செல்லும் அந்தத் தொழிலாளியின் உடல்... துடித்துக் கூக்குரலிடும் அந்த உழைப்பாளியின் உடல்... காமிராமேன் லோகுவின் சகோதரன் இப்பொழுது சடலமாக... நசுங்கி இறந்து போன அந்த எட்டு இனிய உழைப்பாளி நண்பர்கள்... இப்பொழுது சடலங்களாக... பள்ளத்தாக்கிலிருந்து மேலே சாலைக்கு எடுத்துச் செல்ல முடியாமல், உருண்டு கிடந்த ரிஃப்ளெக்டர் மீதே சிதைந்து போன அந்த உடலைத் தூக்கி வைத்து ரிஃப்ளெக்டர்களையே பாடையாக உபயோகித்து நான்கு பேர் தூக்கிக் கொண்டு சாலைக்கு எடுத்துச் சென்ற அந்தக் கோரக் காட்சி...

அப்பப்பா... இப்பொழுது நினைத்தாலும் ரத்தம் உறைகிறது. இறந்து போன எட்டுப் பேர்களைத் தவிர உடல் நசுங்கி பலத்த காயங்களுடன் நகரவே முடியாமல் ஓலமிட்டுக் கொண்டிருந்தவர்கள் பதினெட்டுப் பேர்... இணை இயக்குநர் அமீர்ஜான் உள்பட. அதிகக் காயம் படாமல் தெய்வாதீனமாகத் தப்பியவர்கள் அப்பொழுது உதவி நடன ஆசிரியையாக இருந்த கலாவும், உதவி இயக்குநராக இருந்த சுரேஷ்கிருஷ்ணாவும் தான். காயம் பட்ட அத்தனை பேரையும் சாலைக்குக் கொண்டு வந்து இரவு பூராவும் கொட்டுகின்ற மழையில் காவல் காத்து முப்பது மைல் தள்ளித் தள்ளியிருக்கும் மூன்று ஆஸ்பத்திரிகளில் சேர்த்ததும் இந்த இருவரும்தான்... சென்னையிலிருந்து உதவி கிடைக்கும் வரை.

**வி**பத்தில் இறந்து போனவர்களின் குடும்பத்தினரை சென்னையிலிருந்து சண்டிகார் வரை விமானத்தில் அழைத்துச் செல்ல உடனே ஏற்பாடுகள் துரிதமாகச் செய்யப்பட்டபோதிலும், இவர்கள் அங்கே வந்து சேரும் வரை சடலங்களைக் காப்பாற்றி வைக்க முடியாத நிலையில் அங்குள்ள போலீஸ் மற்றும் ஆஸ்பத்திரி அதிகாரிகளின் வற்புறுத்தலுக்கிணங்க எட்டு சடலங்களும் அங்கேயே தகனம் செய்யப்பட்டன.

"ஆடி அடங்கும் வாழ்க்கையடா!
ஆறடி நிலமே சொந்தமடா"

என்று சுரதா எழுதினார் அன்று. ஆனால் இன்று அந்த எட்டுத் தமிழர்களுமே ஆறடி இந்திய நிலத்தைப் பகிர்ந்து கொண்டார்கள்... இமாச்சலப் பிரதேசத்து நிலத்தை.

ஒருவேளை அந்த இடத்திலேயே இவர்கள் எட்டு பேருக்குமாகச் சேர்த்து ஒரு கல்லறை எழுப்பப்பட்டிருந்தால் அதில் என்ன எழுதப்பட வேண்டுமென்று அவர்கள் நினைத்திருப்பார்கள்?

"எங்களுக்கு இன்னொரு 'டேக்' (பிறப்பு) வேண்டும்; பிறந்த தமிழ் மண்ணிலேயே நாங்கள் புதைக்கப்படுவதற்கு" என்று எழுதப்படலாம்.

**இ**ந்தச் சம்பவம் எங்கள் கே.பி.யை ஒரு உலுக்கு உலுக்கி விட்டிருந்தது. அந்த அதிர்ச்சியிலிருந்து அவர் விடுபட்டு வர நீண்ட நாட்கள் பிடித்தன.

இங்குள்ள திரையுலக அன்பர்கள் கே.பி.யின் துக்கத்திலே பங்குகொள்ள முன் வருவதற்கெல்லாம் முன்பாகவே ஒரு நல்ல இதயம் பம்பாயிலிருந்து செய்தி கேட்டவுடன் ஒரு அனுதாபத் தந்தி அடித்திருந்தது. இன்னும் சொல்லப் போனால் அதுவே முதல் அனுதாபச் செய்தி கூட. கே.பிக்கும் அவருக்கும் அதிகத் தொடர்பு கூட இருந்ததில்லை. அந்த நல்ல இதயம் திரு. ராஜ்கபூர் அவர்கள்தான்.

மற்ற புரொடக்ஷன் சாமான்கள், பெட்டிகள் இவைகளுடன் நானும் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டேன் என்றாலும் மீண்டும் நான் எந்தப் படப்பிடிப்பிலும் கலந்து கொள்ள கே.பி. அனுமதிக்கவில்லை. அழிந்து போன இரத்தக் கறையுடன் காட்சிப் பொருளாக கோடவுனில் கிடக்கிறேன்.

(தொடரும்)



# சொத்து

பெரிய வீட்டின் உள்ளறை பூராவும் ஓவியங்களாய் மாட்டி வைத்திருக்கும். பல தலைமுறைப் படங்கள். அழுக்கான, வண்ணம் மங்கிய படங்கள். அரசரிடம் பரிசு வாங்குவது போல, கோயிலில், சபையில் நடனமாடுவது போல. நாட்டியக்காரி என்பதில் பாட்டிக்குத்தான் எவ்வளவு பெருமை. தள்ளாத வயதிலும் கோயிலிலிருந்து திருப்பாவை கேட்டால் உட்கார்ந்தபடியே அபிநயம் பிடிப்பாள். சௌம்யாவுக்கு வேடிக்கையாய் இருக்கும். 'உங்கம்மாதான் அவளும் படிக்கலை, உனக்கும் சொல்லிக் குடுக்க மாட்டேனுட்டாளே...' என்றபடி பாட்டி அவள் தலையைத் தடவுவாள்.

பாட்டியைப் பார்க்க ஒரு பண்ணையார் வந்து போய்க் கொண்டிருப்பார். இருவருமாய் உட்கார்ந்து நேரம் போவது தெரியாமல் பழைய கதைகள் பேசிக் கொண்டிருப்பார்கள். அவர் கிளம்பிப் போகும் வரை அம்மா உள்ளறையிலேயே இருப்பாள். உம்மென்று உட்கார்ந்திருப்பாள். அம்மாவைப் பார்க்க சௌம்யாவுக்குச் சிரிப்பு வரும்.

பாட்டி செத்துப் போன போது யாருமே பார்க்க வரவில்லை. குடும்பக் கஷ்டங்கள் அதிகரித்து விட்டன. அம்மா எதைப் பற்றியும் கவலைப்படவில்லை. அவள் கவனம் முழுவதும் சௌம்யா மீதே இருந்தது.

அம்மா கல்யாணம் பண்ணிக் கொண்டு போனதில், அதுவும் ஒரு சாதாரண குமாஸ்தாவைப் பண்ணிக் கொண்டதில் பாட்டிக்கு ரொம்ப வருத்தம். அம்மா பிடிவாதம் அசாத்தியமானது. திரும்பவும் அந்த வீட்டை மிதிக்கவே கூடாது என்ற வைராக்கியத்தோடு அவள் பாட்டியை நமஸ்காரம் பண்ணி விட்டுக் கணவனுடன் தனிக்குடித்தனம் போனாள்.

ஆனால் இரண்டே வருடத்தில் கணவன் இறந்து, அவள் பாட்டியோடு திரும்ப வந்து சேர்ந்து கொள்ள நேர்ந்து விட்டது.

பெரிய வீடு. வறுமைதாங்க முடியாமல் அதைக் கிடைத்த விலைக்கு விற்றுத்தான் சாப்பிட வேண்டியதாயிற்று. 'இவ்வளோ கஷ்டப்பட்டு ஏம்மா என்னைப் படிக்க வைக்கறே?' என்றாள் சௌம்யா. அம்மா அழுது விட்டாள். 'கஷ்டத்தைப் பத்தி என்னடி? நீ நல்லாப் படிச்சி, ஒரு வேலையும் உக்காரு. அதைப் பாக்கணும் என் கண்ணால. நம்ம குலத்துலயே காலேஜ் வரை போற முதல் ஆளு நீதாண்டி.'

'அம்மா, இவ்வளோ அழகா இருக்கற நீ இப்படிக் கிழிசலும் கந்தலுமாக் கட்டிண்டு என்னைக் காலேஜ் அனுப்பறியே... எனக்கு ரொம்பக் கஷ்டமா இருக்கு அதைப் பாக்கவே... உன் கஷ்டத்தையெல்லாம் தீர்க்கறது என் பொறுப்பும்மா' என்று நெகிழ்ச்சியுடன் சௌம்யா அம்மாவை நமஸ்கரித்தாள்.

கல்லூரி விட்டுத் திரும்பும் வழியில் ஒரு பெரிய மனிதர் காரில் அவளுக்காகக் காத்திருந்தார். கை கூப்பினார். 'உங்க முகவெட்டுக்கு நீங்க மட்டும் சரின்னு சொல்லுங்க - தமிழ்நாட்டிலேயே பெரிய ஸ்டாரா ஆக்கிக் காட்டுறேன்' என்றார் அவர். சௌம்யாவின் முகம் மலர்ந்தது.

'நம்ம கஷ்டத்துக்கெல்லாம் விடிவுகாலம் வந்தாச்சிம்மா' என்று புன்னகைத்தபடியே சௌம்யா வீட்டுக்குள் நுழைந்தாள்.

— எஸ். சங்கரநாராயணன்



# சித்திரச் சிற்பங்கள் சூழ் சௌந்தரராஜன்!

கமலமனராஜன்

ஓம் என்று சொல்லுவோம்!



• இரண்ய சம்ஹாரம்



• ஸ்ரீவேணுகோபாலன்



• ஊர்த்தவ தாண்டவர்



• தில்லைக்காளி



• ஸ்ரீசக்கரத்தாழ்வார்



• நரசிம்ம இரண்ய யுத்தம்

குடகனாற்றங்கரையில் மண்டூக முனிவர் தவம் செய்து கொண்டிருந்தார். தவத்துக்குத் தானாசுரன் இடைஞ்சல் செய்ய ஆரம்பித்தான். முனிவர், மதுரையிலுள்ள அழகரிடம் முறையிட்டார். அழகரும் குடகனாற்றங் கரையில் எழுந்தருளி, அசுரனை வதம் செய்து, முனிவரை ஆசிர்வதித்தார்.

தானாசுரனை வதம் செய்த இடத்திலேயே கோயில் கொண்டு, அடியார்களுக்கும் அருள வேண்டுமென்று அழகரை முனிவர் வேண்ட, சௌந்திரராஜப் பெருமாள் என்கிற திருநாமத்தோடு, ஸ்ரீதேவி, பூமிதேவி உடன் உறைய, மதுரை அழகர் அங்கும் கோயில் கொண்டார்.

தாளவன க்ஷேத்ரம் என்றும் தாளமாபுரி என்றும் அழைக்கப்பட்ட இந்த புண்ணியத் தலத்தில், பெருமாள் எழுந்தருளிய காலம் எப்போதென்று யாருக்கும் தெரியவில்லை. என்றாலும் சௌந்திரராஜப் பெருமாளுக்குப் பிரும்மாண்டமாகக் கோயில் எழுப்பியவன் விஜயநகர் மன்னனான ராமதேவன்.

1441-ல் பெருமாளுக்குக் கோயில் எழுப்பியதோடு தாயார் கல்யாணசௌந்திரவல்லிக்கும் தனி சந்நிதி அமைத்தான். அதோடு, வேறெங்குமே இல்லாத காட்சியாக சௌந்திரராஜப் பெருமாள் ஆலயத்துக்கு அருகிலேயே சக்கரத்தாழ்வாருக்கும் தனியானதொரு கோயிலை அமைத்தான்.

தாயார் சந்நிதிக்கு வெளியிலுள்ள சங்கநிதி, பத்மநிதி ஆகிய சிற்பங்களும் வேறெங்கும் காணக்கிடைக்காதவை என்கிறார்கள். அதோடு விநாயகர் நின்ற நிலையில் அருளுவதும் இங்குதான் என்கிறார்கள்.

இவை மட்டுமா? தாயார் சந்நிதியின் மண்டபத்தில் செதுக்கப்பட்டுள்ள பதினான்கு சிற்பங்களில் தாரமங்கலம், கிருஷ்ணாபுரம் ஆகிய தலங்களில் கூடக் காணக் கிடைக்காத சிற்பங்களும் அடக்கம். கிருஷ்ணாபுரத்தில் பாதுகாப்பின்றிப் பின்னப்பட்டுப் போன சிற்பங்கள்தான் காட்சி தருகின்றன. இங்கே அப்படியில்லை. அத்தனையும் புது மெருகு குலையாமல் பாதுகாக்கப்பட்டு வருகின்றன என்பது சிறப்பிலும் சிறப்பு. இதற்கும் ஒரு கதை சொல்லுகிறார்கள்.



• சௌந்தரராஜப் பெருமாள் கோவில்...

தாடிக் கொம்பு என்றும் அழைக்கப்படும் இந்தத் திருத்தலம், திண்டுக்கல்லிலிருந்து ஒன்பது கி.மீ. தூரத்தில் இருக்கிறது. முன்பு பதினெட்டுப் பாளையங்களுக்கு இது தலைநகரமாக இருந்ததால், திப்பு சுல்தான் படையெடுத்து வந்த போது, இந்த இடமும் படைகளின் நாசவேலைகளுக்கு இலக்காக நேர்ந்தது.

ஆயினும், தாயார் சந்



• சக்கரத்தாழ்வாருக்குத் தனி கோயில்

**நா**யக்க மன்னர்கள் காலத்தில் தாடிக்கொம்ப் (தாடி என்றால் பனை மரம். பனை மரங்கள் கூட்டமாக இருந்ததால் தாடிக் கொம்ப் என்று அழைக்கப்படலாயிற்று) என்றும் பிறகு அதுவே

• ஸ்ரீமகாவிஷ்ணு



நிதிக்குள் சில படை வீரர்கள் நுழைந்த போது, மண்டபத்திலிருக்கும் சக்கரத்தாழ்வார் சிற்பத்தின் பின்னாலுள்ள சக்கரம் சுழன்று கொண்டிருந்ததாம்! சிற்ப சாஸ்திரங்களின் சகல லட்சணங்களும் ஒரு சிற்பத்தில் மிகத் துல்லியமாகப் பொருந்தியிருக்கும் போதுதான் கற்சக்கரமும் சுழலும் என்று வியந்த வீரர்கள், மண்டபத்திலுள்ள எந்தச் சிற்பத்தையும் பின்னப்படுத்தாமல் திரும்பி விட்டார்களாம்! அந்த அளவுக்கு உண்மையிலேயே நுணுக்கமான கலைச் சிற்பங்கள்.

**கோ**யிலுக்குள் செல்லும் போது சிற்ப மண்டபத்திலுள்ள சிற்பங்கள்தான் நம்மைச் சிலையாக அடிக்கின்றன என்பதில்லை. கோயிலின் சுத்தம் நம்மைப் பிரமிக்க வைக்கிறது. கோயிலின் வெளியிலுள்ள நந்தவனமும் ரம்மியமாகப் பராமரிக்கப்பட்டு வருவது மேலும் ஓர் ஆச்சரியம்.

இந்தக் காரணங்களால், இந்தத் திருக்கோயில் 108 திருப்பதிகளுள் ஒன்றாகவோ அல்லது பாடல் பெற்ற தலமாகவோ இல்லை என்பதெல்லாம் இதன் சிறப்பைத் துளியும் குறைத்து விடவில்லை.

படங்கள் : **யோகா**



Agasthiar's
COLLEGE PUBLICATIONS/
TEXT BOOK OF DYNAMICS (Eighth Edition) Rs. 45
TEXT BOOK OF STATICS (Seventh Edition) Rs 45
(for B.Sc., & Engg. Classes)
Both by:
Dr. M.K. VENKATARAMAN
Buy:
Agasthiar
HINDI GUIDES/
Get Sure Success!!
From: PRATHAMIC
To: VISHARADH
UTHARARDH EXAMS.
Releasing Shortly!
Agasthiar's Great Treasures!!
HINDI-HINDI-TAMIL-ENGLISH DICTIONARY
LEARN HINDI
HINDI GRAMMAR
THROUGH TAMIL & ENGLISH
Agasthiar Publications
CLIVES BUILDING
POST BOX 334 ★ TRICHY
NANDHI KOIL St. TEPPAKULAM
620 002 ★ ☎ 26081
DYNAMICS
STATICS




கேட்டறியுங்கள்
உங்கள்
புதிய
ஜாதகபலன்
ஜோதிட
போன்
இந்த
வாரபலன்கள்
0011 222 222 0+
31 32 33 34 35 36
மேஷம் ரிஷபம் மிதுனம் கடகம் சிம்மம் கன்னி
37 38 39 40 41 42
துலாம் விருச்சிகம் தனுசு மகரம் கும்பம் மீனம்
மன
ஜோதிடம்
உங்கள் வருங்கால
ரகசியங்களை
அறிந்திருங்கள்
0011 222 222 030
பொருத்தம்
உங்கள்
துணையும் நீங்களும்
ஒருவருக்கொருவர்
பொருத்தமானவர்களா?
என்று தெரிந்து
கொள்ளுங்கள்
0011 222 222 043
பட்சி சாஸ்திரம்
ஒரு பண்டைய ஆருட
முறை. உங்கள் குறிப்பிட்ட
கேள்விகளுக்கு பதில் சொல்கிறது.
0011 222 222 025
இது சர்வதேச போன் கால். அங்கீகரிக்கப்பட்ட கட்டணங்கள்.


''மாப்பிள்ளைக்குக் காப்பி இல்லேன்னு சொல்லக் கூடாதுன்னு அரப்புப் பொடியில் டிகாக்ஷன் இறக்கிக் கொடுத்திட்டே; இப்ப எண்ணெய் வழிய வழிய நிக்கறார், அரப்புப் பொடி டப்பாவும் காலி!''
செல்லம்

# பார்த்தி

## 1. தோணித் துறை

காவேரி தீரம் அமைதி கொண்டு விளங்கிற்று. உதயசூரியனின் செம்பொற் கிரணங்களால் நதியின் செந்நீர்ப் பிரவாகம் பொன்னிறம் பெற்றுத் திகழ்ந்தது. அந்தப் புண்ணிய நதிக்குப் 'பொன்னி' என்னும் பெயர் அந்த வேளையில் மிகப் பொருத்தமாய்த் தோன்றியது. சுழிகள் - சுழல்களுடனே விரைந்து சென்று கொண்டிருந்த அந்தப் பிரவாகத்தின் மீது, காலை இளங்காற்று தவழ்ந்து விளையாடி இந்திரஜால வித்தைகள் காட்டிக் கொண்டிருந்தது. சின்னஞ்சிறு அலைகள் ஒன்றோடொன்று லேசாக மோதிய போது சிதறி விழுந்த ஆயிரமாயிரம் நீர்த்துளிகள் ஜாஜ்வல்யமான ரத்தினங்களாகவும், கோமேதகங்களாகவும், வைரங்களாகவும், மரகதங்களாகவும் பிரகாசித்துக் காவேரி நதியை ஒரு மாயாபுரியாக ஆக்கிக் கொண்டிருந்தன.

ஆற்றங்கரையில் ஆலமரங்கள் நெடுந் தூரத்துக்கு நெடுந் தூரம் விழுதுகள் விட்டு, விசாலமாய்ப் படர்ந்திருந்தன. மரங்களில் பழைய இலைகள் எல்லாம் உதிர்ந்து புதிதாய்த் தளிர் விட்டிருந்த காலம். அந்த இளந் தளிர்களின் மீது காலைக் கதிரவனின் பொற்கிரணங்கள் படிந்து, அவற்றைத் தங்கத் தகடுகளாகச் செய்து கொண்டிருந்தன.

கண்ணுக்கெட்டிய தூரம் தண்ணீர் மயமாய்த் தோன்றிய அந்த நதியின் மத்தியில், வடகிழக்குத் திசையிலே ஒரு பசுமையான தீவு காணப்பட்டது. தீவின் நடுவில் பச்சை மரங்களுக்கு மேலே கம்பீரமாகத் தலைதூக்கி நின்ற மாளிகையின் தங்கக் கலசம், தகதகவென்று ஒளிமயமாய் விளங்கிற்று.

அந்த மனோகரமான காலை நேரத்தில் அங்கு எழுந்த பலவகைச் சப்தங்கள் நதிதீரத்தின் அமைதியை நன்கு எடுத்துக் காட்டுவனவாயிருந்தன. விசாலமான ஆலமரங்களில் வாழ்ந்த பறவை இனங்கள், சூரியோதயத்தை வரவேற்றுப் பற்பல இசைகளில் கீதங்கள் பாடின. அந்த இயற்கைச் சங்கீதத்துக்கு நதிப் பிரவாகத்தின் 'ஹோ' என்ற ஓசை சுருதி கொடுத்துக் கொண்டிருந்தது. உணவு தேடும் பொருட்டு வெளியே கிளம்புவதற்கு ஆயத்தமான பறவைகள், தம் சிறகுகளை அடித்து ஆர்ப்பரித்தன. தாய்ப் பறவைகள் குஞ்சுகளிடம் கொஞ்சிக் கொஞ்சி விடைபெற்றுக் கொண்டிருந்தன.

ஆலமரங்களுக்கு நடுவே ஓங்கி வளர்ந்திருந்த அரச மரம் தன் இலைகளைச் சலசலவென்று ஓசைப்படுத்தி 'நானும் இருக்கிறேன்' என்று தெரியப்படுத்திற்று.

நதி ஓரத்தில் ஆலம் விழுதுகளில கட்டிப் போட்டிருந்த தெப்பங்களைத் தண்ணீர்ப் பிரவாகம் அடித்துக் கொண்டு போவதற்கு எவ்வளவோ வீராவேசத்துடன் முயன்றது; அது முடியாமற் போகவே, 'இருக்கட்டும், இருக்கட்டும்' என்று கோபக்

முதல் பாகம்

# பன் கனவு

குரலில் இரைந்து கொண்டே சென்றது.

கரையில், சற்று தூரத்தில், ஓர் ஆலமரத்தி னடியில் குடிசை வீடு ஒன்று காணப்பட்டது. அதன் கூரை வழியாக அடுப்புப் புகை வந்து கொண்டிருந்தது. அடுப்பில் கம்பு அடை வேகும் வாசனையும் லேசாக வந்தது.

குடிசையின் பக்கத்தில் கறவை எருமை ஒன்று படுத்து அசைபோட்டுக் கொண்டிருந் தது. அதன் கன்று அருகில் நின்று, தாய் அசைபோடுவதை மிக்க ஆச்சரியத்துடனே உற்று நோக்கிக் கொண்டிருந்தது.

டக்டக், டக்டக், டக்டக்!

அந்த நிசிநிசீதத்தின் ஆழ்ந்த அமைதியைக் கலைத்துக் கொண்டு குதிரைக் குளம்படியின் சப்தம் கேட்டது.

டக்டக், டக்டக், டக்டக்!

வரவர அந்தச் சப்தம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. இதோ வருகிறது, நாலு கால் பாய்ச்சலில் ஒரு கம்பீரமான குதிரை. அதன் மேல் ஆஜானுபாகுவான வீரன் ஒரு வன் காணப்படுகிறான். வந்த வேகத்தில் குதி ரையும் வீரனும் வியர்வையில் முழுகியிருக் கிறார்கள். தோணித் துறை வந்ததும் குதிரை நிற்கிறது. வீரன் அதன் மேலிருந்து குதித்து இறங்குகிறான்.

குடிசைக்குள்ளே இளம் பெண் ஒருத்தி அடுப்பில் அடை சுட்டுக் கொண்டிருந்தாள். அருகில் திடகாத்திரனான ஒரு வாலிபன் உட்கார்ந்து, தைத்த இளம் ஆலம் இலையிலே போட்டிருந்த கம்பு அடையைக் கீரைக் குழம்புடன் ருசி பார்த்துச் சாப் பிட்டுக் கொண்டிருந்தான். ஒரு தடவை அவன் நாக்கைச் சப்புக் கொட்டி விட்டு, "அடி வள்ளி, இன்னும் எத்தனை நாளைக்கு உன் கையால் கம்பு அடையும் கீரைக் குழம் பும் சாப்பிட எனக்குக் கொடுத்து வைத் திருக்கிறதோ தெரியவில்லை!" என்றான்.

"தினம் போது விடிந்தால் நீ இப்படித் தான் சொல்லிக் கொண்டிருக்கிறாய். இன் னொரு தடவை சொன்னால் இதோ இந்த அடுப்பை வெட்டி காவேரியில் போட்டு விடுவேன் பார்!" என்றாள் அந்தப் பெண்.

"நான் விளையாட்டுக்குச் சொல்ல வில்லை, வள்ளி! மகாராஜாவும் மகாராணி யும் நேற்றுப் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். யுத்தம் நிச்சயமாய் வரப் போகி றது" என்றான் வாலிபன்.

"யுத்தம் வந்தால் உனக்கு என்ன என்று தான் கேட்கிறேன். உன்னை யார் யுத்தத் துக்கு அழைக்கிறார்கள்? உன்பாட்டுக்குப் படகோட்டிக் கொண்டு இருக்க வேண்டியது தானே?"

"அதுதான் இல்லை. நான் மகாராஜாவின் காலிலே விழுந்து கேட்டுக் கொள்ளப் போகி றேன். என்னையும் யுத்தத்துக்கு அழைத்துக் கொண்டு போகச் சொல்லி."

"நான் உன் காலிலே விழுந்து என்னை யும் உன்னோடு அழைத்துக் கொண்டு போ என்று கேட்டுக் கொள்ளப் போகிறேன். அதற்கு உனக்கு இஷ்டமில்லாவிட்டால் - காவேரி ஆற்றோடு போனவளை எடுத்துக் காப்பாற்றினாயோ இல்லையோ - மறுபடி யும் அந்தக் காவேரியிலே இழுத்து விட்டு விட்டுப் போய் விடு."

"அதுதான் சரி, வள்ளி! சோழ தேசம் இப்போது அப்படித்தான் ஆகி விட்டது. பெண் பிள்ளைகள் யுத்தத்துக்குப் போக வேண்டியது; ஆண் பிள்ளைகள் வீட்டுக்குள் ஒளிந்து கொண்டிருக்க வேண்டியது... இரு, இரு, குதிரை வருகிற சப்தம் போல் கேட்கிறதே!"

ஆம்; அந்தச் சமயத்திலேதான் 'டக்டக், டக்டக்' என்ற குதிரைக் காலடியின் சப்தம் கேட்டது. அந்தச் சப்தத்தினால் அவ்வாலி பனின் உடம்பில் ஒரு துடிப்பு உண்டாயிற்று. அப்படியே எச்சிற் கையோடு எழுந்தான். வாசற்புறம் ஓடினான்.

அங்கே அப்போதுதான் குதிரை மீதிருந்து இறங்கிய வீரன், "பொன்னா! மகாராஜா வுக்குச் செய்தி கொண்டு வந்திருக்கிறேன். சீக்கிரம் தோணியை எடு!" என்றான்.

பொன்னன், "இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லி விட்டு உள்ளே ஓடினான்.

**அமரர் கல்கி**

அச் சமயம் வள்ளி சட்டுவத்தில் இன்னொரு அடை தட்டுவதற்காக மாவை எடுத்துக் கொண்டிருந்தாள். "வள்ளி! உறையூரிலிருந்து சேதி கொண்டு வந்திருக்கிறான். அவசரச் சேதியாம். நான் போய் வருகிறேன்" என்றான் பொன்னன்.

"நல்ல அவசரச் சேதி! அரை வயிறு கூட நிரம்பியிராதே? எனக்குப் பிடிக்கவேயில்லை" என்று வள்ளி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"அதற்கென்ன செய்கிறது, வள்ளி! அரண்மனைச் சேவகம் என்றால் சும்மாவா?" என்று பொன்னன் சொல்லிக் கொண்டே



அவளுடைய சமீபம் சென்றான். கோபம் கொண்ட அவளது முகத்தைத் தன் கைக ளால் திருப்பினான். வள்ளி புன்னகையுடன் தன் முகத்தின் மேல் விழுந்திருந்த கூந்தலை இடதுகையால் எடுத்துச் சொருக்குப் போட்டுக் கொண்டு, "சீக்கிரம் வந்து விடு கிறாயா?" என்று சொல்லி விட்டுப் பொன் னனை அண்ணாந்து பார்த்தாள். பொன் னன் அவளுடைய முகத்தை நோக்கிக் குனிந் தான். அப்போது வெளியிலிருந்து, "எத்தனை நேரம் பொன்னா?" என்று கூச்சல் கேட்கவே, பொன்னன் திடுக்கிட்டவனாய், "இதோ வந்து விட்டேன்!" என்று கூச்சலிட்டுக் கொண்டு வெளியே ஓடினான்.

## 2. ராஜ குடும்பம்

பொன்னன் போன பிறகு, வள்ளி வீட்டுக் காரியங்களைப் பார்க்கத் தொடங் கினாள். குடிசையை மெழுகிச் சுத்தம் செய் தாள். மரத்தடியில் கட்டியிருந்த எருமை மாட்டைக் கறந்து கொண்டு வந்தாள். பிறகு காவேரியில் மரக் கிளைகள் தாழ்ந்திருந்த ஓரிடத்திலே இறங்கிக் குளித்து விட்டு வந்தாள். சேலை மாற்றிக் கொண்ட பிறகு மறுபடியும் அடுப்பு மூட்டிச் சமையல் செய்யத் தொடங்கினாள்.

ஆனால், அவளுடைய மனது என்னமோ பரபரவென்று அலைந்து கொண்டிருந்தது. அடிக்கடி குடிசை வாசலுக்கு வந்து, தன் னுடைய கரிய பெரிய கண்களைச் சுழற்றி, நாலாபுறமும் பார்த்து விட்டு உள்ளே போனாள். ஏதோ விசேஷ சம்பவங்கள் நடக்கப் போகின்றன என்று ஆவலுடன் எதிர்பார்த்தவளாய்த் தோன்றினாள்.

அவள் எதிர்பார்த்தது வீண் போக வில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் உறை யூர்ப் பக்கத்திலிருந்து பத்துப் பதினைந்து குதிரை வீரர்கள் வந்தார்கள். அவர்களுக்கு மத்தியில், அழகாக அலங்கரிக்கப்பட்ட இரண்டு வெள்ளைப் புரவிகளும் ஒரு தந்தப் பல்லக்கும் வந்தன. அந்த வெண் புரவிகளின் மேல் யாரும் வீற்றிருக்கவில்லை; பல்லக்கும் வெறுமையாகவே இருந்தது. திடகாத்திர தேகிகளான எட்டுப் பேர் பல்லக்கைச் சுமந்து கொண்டு வந்தார்கள்.

எல்லாரும் தோணித் துறைக்குச் சற்று தூரத்தில் வந்து நின்றார்கள்; பல்லக்கு கீழே இறக்கப்பட்டது. குதிரை மீதிருந்தவர்களும் கீழே இறங்கிக் குதிரைகளை மரங்களில் கட்டினார்கள்.

இதையெல்லாம் குடிசை வாசலில் நின்று வள்ளி கண்கொட்டாமல் பார்த்துக் கொண் டிருந்தாள்.

அவள் அப்படி நிற்பதைப் பார்த்த வீரர் களில் ஒருவன், "அண்ணே! வள்ளியிடம் தண்ணீர் வாங்கிக் குடித்து விட்டு வரலாம்" என்றான்.

"அடே, வேலப்பா! காவேரி நிறையத் தண்ணீர் போகிறது. வள்ளியிடம் என்னத் திற்காகத் தண்ணீர் கேட்கப் போகிறாய்?" என்றான் மற்றவன்.

"இருந்தாலும், வள்ளியின் கையால் தண் ணீர் குடிப்பது போல ஆகுமா, அண்ணே!"

இப்படி பேசிக் கொண்டு இருவரும் குடிசையருகில் வந்து சேர்ந்தார்கள்.

"வள்ளி! கொஞ்சம் தாகத்துக்குத் தண்ணீர் தருகிறாயா?" என்று வேலப்பன் கேட்டான்.

வள்ளி உள்ளே விரைவாகச் சென்று சட்டி யில் மோர் எடுத்துக் கொண்டு வந்து இரண்டு பேருக்கும் கொடுத்தாள். அவர்கள் குடிக்கும்போதே, "மகாராஜா இன்றைக்கு உறையூருக்குப் போகிறாராமே? ஏன் இவ்வ ளவு அவசரம்? இந்த மாதமெல்லாம் அவர் 'வசந்த மாளிகையில்' இருப்பது வழக்கமா யிற்றே?" என்று கேட்டாள்.

"எங்களை ஏன் கேட்கிறாய், வள்ளி? உன்னுடைய புருஷனைக் கேட்கிறதுதானே? படகோட்டி பொன்னனுக்குத் தெரியாத ராஜ ரகசியம் என்ன இருக்கிறது?" என்றான் வேலப்பன்.

"காலையில் சாப்பிட உட்கார்ந்தார்; அதற் குள் அவசரமாய் ஆள் வந்து, மகாராஜா வுக்குச் சேதி கொண்டு போக வேண்டு மென்று சொல்லவே, எழுந்து போய் விட் டார். சரியாகச் சாப்பிடக்கூட இல்லை!" என்றாள் வள்ளி.

"பாரப்பா, புருஷன் பேரில் உள்ள கரிச னத்தை! பெண்சாதி என்றால் இப்படியல் லவோ இருக்க வேணும்!" என்றான் வேலப் பன். வள்ளியின் கன்னங்கள் வெட்கத்தால் குழிந்தன. "சரிதான் போங்கள்! பரிகாசம் போதும்" என்றாள்.

"இல்லை, வள்ளி! இந்த மாதிரி பரிகாச மெல்லாம் இன்னும் எத்தனை நாளைக்குச் செய்யப் போகிறோம்" என்றான் வேலப்பன்.

"ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்! என்ன சமாசாரம் என்றுதான் சொல்லுங் களேன்?" என்றாள் வள்ளி.

"பெரிய யுத்தம் வரப் போகிறதே, தெரி யாதா உனக்கு?"

"ஆமாம்; யுத்தம் யுத்தம் என்றுதான் பேச்சு நடக்கிறது. ஆனால் என்னத்துக்காக யுத்தம் என்றுதான் தெரியவில்லை."

# இதோ! பொன்னகை தந்த சுமங்கல் நீங்கள் புன்னகைக்க இன்னொரு காரணத்தையும் அளிக்கிறது

## SUMANGAL

JEWELLERS

SINCE 1979

FIXED DEPOSIT OFFER

# 22% வட்டி + உங்கள் பிக்ஸட் டெபாசிட்களுக்கு

+ செலுத்தப்படும் ஒவ்வொரு டெபாசிட்டுக்கும்
ஊக்கத்தொகை மற்றும் பரிசு

வட்டித்தொகை பின் தேதியிட்ட காசோலைகள் /
வட்டி வாரண்ட்களாக முன்னமேயே வழங்கப்படும்

| | | |
|---|---|---|
| வட்டி அளிப்பு | : | மாதந்தோறும் |
| வைப்புக்காலம் | : | ஒரு வருடம் மற்றும் அதற்கு மேலும் |
| வைப்புத்தொகை | : | Rs. 5,000/- மற்றும் அதற்கு மேலும் |

**சுமங்கல் ஜுவல்லர்ஸ் அசோசியேட் நிறுவனங்கள்**

114, உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை - 600 017.

தொலைபேசி எண் : 4340122, 4344964.

*Interestingly Different*

MEDIA MEN / SJA / 005 T

**இதோ ஒரு புதிய திட்டம்!**

## உங்கள் முதலீடு 5 ஆண்டுகளில் இருமடங்கு ஆகிறது (ரூ.5,000 = ரூ. 10,000) மேலும் பரிசுகளும், போனஸ்களும்

**நீங்கள் ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ. 5,000/– முதலீடு செய்தால் 5 ஆண்டுகளில் ரூ. 10,000/– ஆக திரும்பக் கிடைக்கிறது**

*அதுமட்டுமா?*

**அமுதசுரபி 5 ஆண்டுகளுக்கு இலவசம்**

47 ஆண்டுகளாகச் சிறப்பாக நடைபெற்று வரும் இலக்கிய மாத இதழ். (இப்போதைய விலை ரூ. 6/- வருங்காலத்தில் கூடுதல் விலைக்கு விற்றாலும்) 5 ஆண்டுகளுக்கு இலவசம்.

**அமுதசுரபி தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு இலவசம்**

விலைமதிப்பற்ற பொக்கிஷமான அமுத சுரபி தீபாவளி மலர் (இந்த ஆண்டு தீபாவளி மலர் விலை ரூ. 40. வருங்காலத்தில் கூடுதலாக விற்றாலும்) 5 ஆண்டுகளுக்கு இலவசமாக எம் செலவில் அனுப்பப்படும்.



*இவை தவிர*

**போனஸ் 1 :**

புதிதாக சேர்பவர்களுக்கு 1995ஆம் ஆண்டு ராமர் பட்டாபிஷேக வண்ணப்பட தினசரிக் காலண்டர் அன்பளிப்பு.

**போனஸ் 2 :**

5000 முதலீட்டுத் தொகை கிடைத்த வுடன் ஸ்ரீ ஜகத்குரு மகா காவியம் (மஹா சமாதி அடைந்த மஹா பெரியவரின் சரித்திரம். காப்பியப் போட்டியில் 'இந்தியன் வங்கி பரிசு' பெற்றது). அன்பளிப்பாக வழங்கப்படும்.

SHRIRAM GROUP COMPANIES
MADRAS

# அமுதசுரபி ஸ்ரீராம் டிரஸ்ட்

ரூ.5000 செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி:

"ஸ்ரீராம் டிரஸ்ட்" (Shriram Trust)
145, லிங்கிச் செட்டி தெரு
சென்னை - 600 001. போன்: 5228545.

ADWAVE/ST/4814

"நாலைந்து வருஷமாய் நமது மகாராஜா, காஞ்சி நரசிம்மவர்ம சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்டவில்லை. வடக்கே படையெடுத்துப் போயிருந்த சக்கரவர்த்தி திரும்பி வந்து விட்டாராம்; நமது மகாராஜா நாலு வருஷமாய்க் கப்பம் கட்டாததற்கு முகாந்திரம் கேட்பதற்காகத் தூதர்களை அனுப்பியிருக்கிறாராம். அவர்கள் இன்றைக்கு வந்து சேர்வார்களாம்" என்றான் வேலப்பன்.

"இதற்காக யுத்தம் ஏன் வர வேண்டும்? நாலு வருஷத்துக் கப்பத்தையும் சேர்த்துக் கொடுத்து விட்டால் போகிறது!" என்றாள் வள்ளி.

"அதுதான் நம்முடைய மகாராஜாவுக்கு இஷ்டமில்லை. முன் வைத்த காலைப் பின் வைக்க முடியாது என்கிறார்."

இப்படி இவர்கள் பேசிக் கொண்டேயிருக்கும் போது, நடு ஆற்றில் படகு வருவது தெரிந்தது. வேலப்பனும் இன்னொருவனும் உடனே திரும்பிப் போய் மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் படகு துறையை அடைந்தது. இது பொன்னன் போகும் போது தள்ளிக் கொண்டு போன சாதாரணப் படகல்ல; அழகிய வேலைப்பாடுகளுடன் ஒரு பக்கம் விமானம் அமைத்துச் செய்திருந்த ராஜ படகு. படகின் விமானத்தில் மூன்று பேர் அமர்ந்திருந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் ராஜகுடும்பத்தினர் என்று தெரிந்து கொள்ளலாம். பார்த்திப சோழ மகாராஜாவும், அருள்மொழி மகாராணியும், இளவரசர் விக்கிரமனுந்தான் அவர்கள்.

அரையில் பூண்ட உடைவாளும், கையில் நெடிய வேலாயுதம் தரித்த ஆஜானுபாகுகளான இரண்டு மெய்க்காவலர்கள் படகின் இருபுறத்திலும் நின்று கொண்டிருந்தார்கள். பொன்னனும் இன்னொருவனும் படகு தள்ளிக் கொண்டு வந்தார்கள்.

படகு கரை சேர்ந்ததும், மெய்க்காவலர்கள் இருவரும் முதலில் இறங்கி, "ராஜாதி ராஜ, ராஜ மார்த்தாண்ட, ராஜகம்பீர, சோழ மண்டலாதிபதி பார்த்திப மகாராஜா, பராக்!" என்று கூவினார்கள். கரையில் நின்ற வீரர்கள் அவ்வளவு பேரும் கும்பிட்ட கைகளுடன் "மகாராஜா வெல்க" என்று எதிரொலி செய்தார்கள்.

படகை விட்டு இறங்கியதும் மகாராஜா பொன்னனுடைய குடிசைப் பக்கம் நோக்கினார். குடிசை வாசலில் நின்று பார்த்துக் கொண்டிருந்த வள்ளியின் பேரில் அவருடைய பார்வை விழுந்தது. உடனே கையினால் சமிக்ஞை செய்து அழைத்தார். வள்ளி விரைவாக ஓடி வந்து தண்டனிட்டாள். மகாராஜா எழுந்திருக்கச் சொன்னவுடன் எழுந்து பொன்னனுக்குப் பின்னால் அடக்க ஒடுக்கத்துடன் நின்றாள். "வள்ளி! உன்னைப் பொன்னன் நன்றாகப் பார்த்துக் கொள்கிறானா?" என்று மகாராஜா கேட்டார். வள்ளி தலையைக் குனிந்து கொண்டு புன்னகை செய்தாள். பதில் சொல்ல அவளுக்கு நா எழவில்லை. அப்போது மகாராணி, "அவளை அப்படி நீங்கள் கேட்டிருக்கக் கூடாது; 'பொன்னனை நீ நன்றாய்ப் பார்த்துக் கொள்கிறாயா?' என்று கேட்டால், பதில் சொல்லுவாள்" என்றாள்.

மகாராஜா சிரித்து விட்டு, "வள்ளி! மகாராணி சொன்னது காதில் விழுந்ததா? பொன்னனை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். அந்தண்டை இந்தண்டை போகவிடாதே. உன்னை வெள்ளத்திலிருந்து கரை சேர்த்தது போல் இன்னும் யாரையாவது கொண்டு வந்து கரை சேர்த்து வைக்கப் போகிறான்!" என்றார்.

வள்ளியை வெட்கம் ஒரு பக்கமும், சந்தோஷம் ஒரு பக்கமும் பிடுங்கித் தின்றன. தேகம் நூறு கோணலாக வளைந்தது.

ஆனால், பொன்னனோ இந்த ஹாஸ்யப் பேச்சைக் கவனித்ததாகவே தெரியவில்லை. அவன் இரு கரங்களையும் கூப்பி, "மகாராஜா! ஒரு வரம் கொடுக்க வேணும்! யுத்தத்துக்கு மகாராஜா போகும் போது அடிமையையும் அழைத்துப் போக வேணும்" என்றான்.

மகாராஜா சற்று நிதானித்தார். பிறகு சொன்னார் : "பொன்னா! உன்னுடைய மனது எனக்குத் தெரியும். ஆனாலும் நீ கேட்ட வரம் கொடுக்க முடியாது. நீ இங்கேதான் இருக்க வேண்டும். போர்க்களத்திலிருந்து நான் திரும்பி வராவிட்டால், இளவரசருக்கு நீந்தக் கற்றுக் கொடுக்கும் பொறுப்பை உன்னிடம் ஒப்புவிக்கிறேன். தெரிகிறதா?" என்றார். இதைக் கேட்டதும் பொன்னன் வள்ளி இருவருடைய கண்களிலும் நீர் ததும்பிற்று. மகாராணி அருள்மொழி தேவி ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள். அவளுடைய உள்ளத்தில் என்னென்ன சிந்தனைகள் கொந்தளித்து எழுந்தனவோ, யார் கண்டது!



"தீபாவளிக்கு என் மனைவி ரெண்டாயிரம் ரூபாய்க்குப் பட்டுப் புடைவை வேணும்னு கேட்டா. நான் பயங்கர கோபத்துல கன்னாபின்னான்னு திட்டிட்டேன்."

"உங்க மனைவியையா?"

"இல்லீங்க, நரகாசுரனை!"

- எஸ். அனந்தகுமார்





## அருள்வாக்கு

ஸ்வாமி ஒருவர்தான். அவரே மூன்று ரூபங்களை எடுத்துக் கொண்டு பிரம்மாவாகச் சிருஷ்டிக்கிறார், விஷ்ணுவாகப் பரிபாலிக்கிறார், ருத்திரனாக சம்ஹாரம் செய்கிறார்.

உண்மையில் இவர்களும் வேறு வேறு இல்லை. கோர்ட்டுக்குப் போகும் போது தாசில்தார் ஸூட் போட்டுக் கொண்டிருக்கிறார், பூஜை செய்யும்போது அவரே பஞ்சகச்சம் கட்டிக் கொள்கிறார், பத்தினி அகத்தில் இல்லாமல் அவரே சமைக்க நேர்ந்தால் அப்போது துண்டை மட்டும் இடுப்பில் சுற்றிக் கொள்கிறார். நாம் சாமானிய ஜீவர்கள் - வேலைக்குத் தக்கபடி உடுப்பை மட்டும் மாற்றிக் கொள்கிறோம். சர்வ சக்தனான ஸ்வாமி, வேலைக்கு ஏற்ப ரூபத்தையும் மாற்றிக் கொள்வார். பார்க்கப் போனால் சரீரம் என்பதே ஆத்மாவுக்கு ஒரு உடுப்பு மாதிரிதான். கீதையில் பகவான் இப்படித்தான் சொல்லியிருக்கிறார்.

அல்ப சக்தர்களான நமக்கு வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு வேஷங்கள் ஏற்படுகின்றன. சர்வ சக்தரான ஸ்வாமி ஒரே சமயத்தில் பல காரியங்களில் ஈடுபட்டுப் பல வேஷங்களையும் போடுவார். நாம் ஒரு சமயத்தில் ஒரு வேலைதான் செய்கிறோம்; ஸ்வாமி ஒரே சமயத்தில் சகல வேலையும் செய்வதால் எல்லா வேஷமும் போட்டுக் கொண்டிருக்கிறார். இவற்றை வெவ்வேறு தெய்வ வடிவங்களாகச் சொல்கிறோம். இந்தத் தெய்வ ரூபங்களில் மகாவிஷ்ணு, ஈசுவரன், அம்பாள், விக்நேசுவரர், ஸுப்ரம்மணியர் போன்றவர்கள் ஒரு சமயத்தில் ஏதோ ஒரு மாதிரி காரியம் மட்டும் செய்தாலும் கூட, அவர்களுக்கு உள்ளுக்குள் தாங்கள் முழு முதல் ஸ்வாமிதான் என்று தெரியும். அதனால் அவர்கள் பக்தர்களுக்கு மோக்ஷ பரியந்தம் எல்லா அநுக்கிரஹங்களும் செய்வார்கள்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

மகாராஜாவும் பரிவாரங்களும் வெகு தூரம் போன பிறகுதான் வள்ளி பழைய வள்ளியானாள். அப்போது பொன்னனைப் பார்த்து, "பார்த்தாயா! மகாராஜா என்ன சொன்னார்கள்! என்னைக் கேட்காமல் அந்தண்டை இந்தண்டை போகக் கூடாது தெரியுமா?" என்றாள்.

"அப்படியானால், இப்போதே கேட்டு விடுகிறேன். வள்ளி, இன்று மத்தியானம் நான் உறையூர் போக வேண்டும்" என்றான் பொன்னன்.

"உறையூரிலே என்ன?" என்று வள்ளி கேட்டாள்.

"இன்றைக்குப் பெரிய விசேஷமெல்லாம் நடக்கப் போகிறது. காஞ்சியிலிருந்து கப்பம் கேட்பதற்காகத் தூதர்கள் வரப் போகிறார்களாம். மகாராஜா 'முடியாது' என்று சொல்லப் போகிறாராம். நான் கட்டாயம் போக வேணும்" என்றான் பொன்னன்.

அப்போது வள்ளி இரு கரங்களையும் குவித்துக் கொண்டு, குரலைப் பொன்னன் குரல் போல் மாற்றிக் கொண்டு, "மகாராஜா! எனக்கு ஒரு வரம் கொடுக்க வேணும்; மகாராஜா யுத்தத்துக்குப் போனால் அடிமையையும் அழைத்துப் போக வேணும்" என்றாள்.

"சே, போ! இப்படி நீ பரிகாசம் செய்வதாயிருந்தால் நான் போகவில்லை" என்றான் பொன்னன்.

இந்த உறுதியுடனேயே பொன்னன் சாவகாசமாகக் காவேரியாற்றில் இறங்கி நீந்திக் கொம்மாளம் போட்டுக் கொண்டிருந்தான். ஆனால், கொஞ்ச நேரத்துக்கெல்லாம் "டக் டக், டக் டக்" என்று குதிரைகளின் குளம்புச் சப்தம் கேட்டதும் அவனுக்குச் சொல்ல முடியாத பரபரப்பு உண்டாயிற்று. கரையேறி ஓடி வந்து பார்த்தான். வள்ளியும் குடிசைக்குள்ளிருந்து வெளியே வந்தாள். சிறிது நேரத்துக்கெல்லாம் முதலில் ஒரு குதிரையும், பின்னால் நாலு குதிரைகளும் கிழக்குத் திசையிலிருந்து அதிவேகமாய் வந்தன. முதல் குதிரையின் மேல் இருந்தவன் கையில் சிங்க உருவம் வரைந்த கொடி பிடித்துக் கொண்டிருந்தான். குதிரைகள் உறையூரை நோக்கிப் பறந்தன.

"சிங்கக் கொடி போட்டுக் கொண்டு போகிறார்களே, இவர்கள் யார்?" என்று வள்ளி கேட்டாள்.

மெய்ம்மறந்து நின்ற பொன்னன், திடுக்கிட்டவனாய், "வள்ளி! இவர்கள்தான் பல்லவ தூதர்கள். நான் எப்படியும் இன்று உறையூர் போக வேணும், நீயும் வேணுமானால் வா! உன் பாட்டனையும் பார்த்தது போல இருக்கும்" என்றான்.

(தொடரும்)

# புகழ் பெற்ற அருணோதயம் தரும்
# புகழ்பெற்ற ஆசிரியர்களின் நாவல்கள்

## ரமணி சந்திரன் நாவல்கள்

| | |
|---|---|
| மைவிழி மயக்கம் | ரூ.40.00 |
| நேசம் மறக்கவில்லை நெஞ்சம் | ரூ.18.00 |
| காத்திருக்கிறேன் ராஜகுமாரா | ரூ.12.00 |
| எனக்காகவே நீ | ரூ.50.00 |
| பொன்மானைத் தேடி | ரூ.15.00 |
| விடியலைத் தேடி | ரூ.50.00 |
| கானமழை நீ எனக்கு | ரூ.12.00 |
| தரங்கிணி | ரூ.12.00 |
| அழகுமயில் ஆடும் | ரூ.16.00 |
| வாணி | ரூ.13.00 |
| நாள் நல்ல நாள் | ரூ.35.00 |
| இனிவரும் உதயம் | ரூ.30.00 |
| ராமன் தேடிய சீதை | ரூ.18.00 |
| பொழுது விடிகிற வேளையிலே | ரூ.35.00 |
| பானுமதி | ரூ.14.00 |
| வைரமலர் | ரூ.45.00 |
| கிழக்கு வெளுத்ததம்மா | ரூ.24.00 |
| பால் நிலா | ரூ.40.00 |
| நின்னையே ரதி என்று | ரூ.14.00 |
| இது ஓர் உதயம் | ரூ.14.00 |
| என் உயிரே கண்ணம்மா | ரூ.20.00 |
| என் கண்ணில் பாவையன்றோ | ரூ.25.00 |
| மெல்லத் திறந்தது கதவு | ரூ.15.00 |
| பூங்காற்று | ரூ.22.00 |
| ஒரு மலர் | ரூ.25.00 |
| மானே, மானே, மானே | ரூ.25.00 |
| ஒரு கல்யாணத்தின் கதை | ரூ.15.00 |
| மதுமதி | ரூ.18.00 |
| நினைப்பதெல்லாம் நடந்து விட்டால் | ரூ.18.00 |
| மயங்குகிறாள் ஒரு மாது | ரூ.40.00 |
| வெண்மையில் எத்தனை நிறங்கள் | ரூ.45.00 |
| தொடுகோடுகள் | ரூ.25.00 |
| விடியலைத் தேடும் பூபாளம் | ரூ.25.00 |
| கண்ணே கண்மணியே | ரூ.22.00 |
| காதலெனும் சோலையிலே | ரூ.40.00 |
| நாதசுர ஓசையிலே | ரூ.18.00 |
| லாவண்யா | ரூ.25.00 |
| அவனும் அவளும் | ரூ.20.00 |

## பட்டுக்கோட்டை பிரபாகர் நாவல்கள்

| | |
|---|---|
| காதலிக்குக் கல்யாணம் | ரூ.30.00 |
| சொல்லித் தெரிவதில்லை | ரூ.40.00 |

| | |
|---|---|
| பசித்தாலும் புலி | ரூ.40.00 |
| சட்டப்படி குற்றமில்லை | ரூ.20.00 |
| மன்மதன் வந்தானடி | ரூ.28.00 |
| புன்னகை போதும் | ரூ.24.00 |
| பிருந்தாவனமும் நொந்த குமாரனும் | ரூ.22.00 |
| தொட்டுவா தென்றலே | ரூ.20.00 |
| நடமாடும் சொர்க்கம் | ரூ.25.00 |
| கவலை நேரம் காலை 10 மணி | ரூ.20.00 |
| அதிகாலைத் தீர்ப்பு | ரூ.25.00 |
| நான் உன்னை நேசிக்கிறேன் | ரூ.23.00 |
| என் இனிய எதிரி | ரூ.26.00 |

## ராஜேஷ்குமார் நாவல்கள்

| | |
|---|---|
| இரவல் சொர்க்கம் | ரூ.25.00 |
| உயிர் உதிர் காலம் | ரூ.20.00 |
| விபரீதத்திற்கு ஒரு விசா | ரூ.20.00 |
| உன்வானம் என் அருகில் | ரூ.24.00 |
| உன்னை விட்டால் யாருமில்லை | ரூ.25.00 |
| ஆச்சரியம் ஆனால் உண்மை | ரூ.15.00 |
| சூரியதாகம் | ரூ.20.00 |
| கவிதா நகர் கடைசித் தெரு | ரூ.18.00 |
| இன்று இறப்பு விழா | ரூ.16.00 |
| இந்து இனி இல்லை | ரூ.17.50 |
| எங்கும் ஹேமா எதிலும் ஹேமா | ரூ.12.00 |

## சுபா நாவல்கள்

| | |
|---|---|
| வானத்தில் ஒரு வல்லூறு | ரூ.30.00 |
| ஒளிவதற்கு ஓர் இடம் | ரூ.28.00 |
| கனவே காத்திரு | ரூ.20.00 |
| இதயத் துடிப்பு | ரூ.25.00 |
| இரவின் முடிவில் | ரூ.20.00 |
| நிலா மயக்கம் | ரூ.16.00 |
| புத்தம் புது புதிரே | ரூ.40.00 |
| இதயங்கள் | ரூ.20.00 |
| உடைந்த விலங்கு | ரூ.25.00 |
| ரம்யாவுக்கு ஒரு ரோஜா | ரூ.26.00 |

(புத்தக விலையுடன் பதிவுத் தபால் செலவு ரூ.8 சேர்த்து M.O. அனுப்பவும்)

**அருணோதயம்** தொலைபேசி: 8267553

3, கௌடியாமடம் சாலை, இராயப்பேட்டை :: சென்னை-600 014



**பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி**

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 130 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 500/-, ரூ. 750/- அல்லது 1000/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 5000/-, ரூ. 7500 அல்லது 10,000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்குகொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும் :

**அத்வைத வித்யசார்யா மஹாராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D-76 மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

**செக் (or) டிராப்ட் முதலியவைகளை A.V.M.S.G.D.P.S. ஸமிதி என்ற பெயருக்கு அனுப்பலாம்.**

*****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு*****

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

I

1. ரிக்வேத சுருங்கலா - நாகராக்ஷரம் - ரூ. 60/-
2. ரிக்வேத ஸம்ஹிதா நாகராக்ஷரம் 10 மண்டலங்கள் விலை ரூ. 165/-
3. ஸாமவேத ஸம்ஹிதா - கிரந்தாக்ஷரம் - 2 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 185/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
4. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 210/-, இரண்டாம் பாகம் - ரூ. 110/-, மூன்றாம் பாகம் - ரூ. 85/-)
5. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - கிரந்தாக்ஷரம் - ரூ. 80/-
6. சாந்தி குஸுமாகரம் (2 பாகங்கள்) - ரூ. 170/-

II **கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்**

1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 85/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

III **நாகராக்ஷரம்**

1. மனாசேச்லோக - ராமமந்த்ராசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - தமிழ் பதவுரை)
3. நளோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வேதபாட வழிமுறை (ஸ்வரம்) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-
5. ராமோதந்தம் - நாகராக்ஷரம் - ரூ. 25/-
6. ஸௌபாக்ய யந்த்ரம் - ஆர்ட் பேப்பரில் - ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை, முழுத் தொகையையும் **M.O. (or) Draft** மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம். "எமது நூல்கள் பற்றிய விவரமான லிஸ்ட் வாங்க விரும்புவோர் ரூ. 3/- தபால்தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்."

**பிரஸிடெண்ட் - டிரஷரர் - A.V.M.S.G.D.P.S ஸமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

நேரில் வாங்க விரும்புவோர் கண்டிப்பாக - ராஜா வேதகாவ்ய பாடசாலை, யாகசாலை தெரு. (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001 என்ற விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும்.



# கோட்டை ராப்!

வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா வரிசையில் 'ராப்'பா? ஆனால் இது கலபம். யார் வேண்டுமானாலும் எழுதலாம் என்று தோன்றுகிறது. இதோ ஒரு பேட்டை ராப் - ஸாரி - கோட்டை ராப் :

### எடுப்பு

செஞ்சிக்கோட்டை, வஞ்சிக்கோட்டை,
செயின்ட் ஜார்ஜு அம்மா கோட்டை - கோட்டை ராப்.

### தொடுப்பு

அம்மாவுக்கு, ஐயாவுக்கு, ஆயாவுக்கு, தாத்தாவுக்கு,
அக்காவுக்கு, மாமாவுக்கு, ஆயாவோட ஆயாவுக்கு
சட்டம் போட, திட்டம் போட, கொட்டம் போட
கும்பல் உண்டு - கோட்டை ராப், ராப், ராப்.

### முடிப்பு

மந்திரிங்க, எந்திரிங்க அம்மாவண்டி வருதுவருது
சலாம் வெச்சி, சல்யூட் வெச்சி, காலைப் பிடிச்சி, கையைப் பிடிச்சி,
சீட்டு கேட்டு, 'நோட்டு' பார்த்து, நோட்டம் போட்டு, சீட்டு பிடிச்சி
வேட்டு வெக்க வேளை பார்த்து,
'போட்டுக் குடுத்து' பேரு வாங்க
கும்பல் வருது - வருது வருது வருது வருது
கோட்டை ராப், ராப், ராப்.

— குரோம்பேட்டை கவிராயர்

('காதலன்' பேட்டை ராப் குறித்து வேலூர் பா. பூ. ஜெகன் எழுதிய ஒரு கடிதம் கண்டதன் காரணமாக உருவான ராப்.)




# 8 திசையிலும்

"காலிங்கராயா, ஏன் தயங்குகிறாய்? உள்ளே வா" உள்ளிருந்து கனமான குரலொன்று ஒலித்து அவனை உள்ளே இழுத்தது. உள்ளே நுழைந்து, விழிகளை உயர்த்திய படைத்தலைவன் எதிரில், கரங்களைப் பின்புறம் கட்டியபடி நின்றிருந்தான் சோழச் சக்கரவர்த்தி குலோத்துங்கன்.

"காலிங்கராயா, போர்களில் நீ காட்டிய தீவிரம் இப்போது உன் பக்தியிலும் தெரிவதால்தான் இந்தப் பணியை உன்னிடம் ஒப்படைத்தேன். பகிரங்கமாக இதை அறிவிப்பதால் குறிப்பிட்டவர்களுக்கு, என்னைச் சேர்ந்தவர்களுக்கு பட்சமாக நடப்பதாக அபக்யாதி வந்து சேரும். சரி, இதுவரை எங்கெல்லாம் தேடினாய்?"

சக்கரவர்த்தியின் நிலை புரிந்ததால் படைத் தலைவன் முகத்தில் சோகம் படர்ந்து கிடந்தது. குரலிலும் அது ஒலித்தது. "பாண்டி நாட்டுத் தலங்கள் பதினான்கிலும், நடு நாட்டுத் தலங்கள் இருபத்திரெண்டிலும், தொண்டை நாட்டில் முப்பத்திரண்டு தலங்களிலும் தேடி விட்டேன். இன்னும் எட்டுத் திசைகளிலும் தேடுகிறேன் பிரபு."



குலோத்துங்கன் விழிகளில் வியப்பு மலர்ந்தது. "உன் வார்த்தைகளை அப்படியே எழுதியிருக்கிறான் என் முன்னோன்" என்றவன், அறை மூலையிலிருந்த பொக்கிஷப் பேழையிலிருந்து அந்தக் குழலை எடுத்தான். "காலிங்கராயா, இதைப் படித்துப் பார்" என்றான்.

அன்றுவரை நடுக்கமென்பதை வாழ்நாளில் அறிந்திராத படைத் தலைவனின் கரங்கள் சோழர் குலத்து முன்னோனும், சோழ நாட்டைப் பேரரசாக்கியவனுமான ராஜராஜ சோழனின் அந்த ஓலைக் குழலைக் கரங்களில் வாங்கிய போது லேசாக நடுங்கின. மெல்ல அதை விழிகளில் ஒற்றிக் கொண்டு பிரித்தவன், ஏதோ வேத பாடம் படிப்பவனைப் போல மெல்லப் படித்தான்.

"யான், ராஜராஜ சோழன் என் சந்ததியினருக்கு இடும் ஆக்ஞை. அம்பலவாணர் அருளினாலும், நம்பியாண்டார் நம்பியின் அருளினாலும் சைவத் திருமுறைகளை ஏழு பகுதியாகத்

# தேடுகிறேன்...



தொகுத்து தில்லையில் வைத்திருக்கிறேன். ஆனால் அந்தப் பணியில் மூன்றாம் திருமுறையில் ஞான சம்பந்தரின் இறுதிப் பதிகம் மட்டும் கிடைக்கவில்லை. அதில் மூன்று வரிகள் மட்டுமே கிடைத்தன. அதற்குரிய திருத்தலத்தையும், பதிகத்தையும் என் வாழ்நாள் முழுவதும் எட்டுத் திசைகளிலும் தேடுகிறேன். இதுவரை அந்தப் பதிகம் கிடைக்கவில்லை. சோழ அரியணையில் அமரும் ஒவ்வொரு மன்னனும் இந்தப் பணியைத் தொடர்ந்து பூர்த்தி செய்ய வேண்டும். தர்மமும், நீதியும் தவறாத ஒரு சோழன் கரங்களில் இது ஒரு நாள் கிடைக்கும். கிடைக்க வேண்டும். இது என் பின்னோர்களுக்கு நான் இடும் ஆக்ஞை" என்று முடிந்த அந்த ஓலையுடன் செல்லரித்த ஓலையொன்றும் இருந்தது. பதிகத்தின் முதல் மூன்று வரிகளும் அதிலிருந்தன. அதைச் சற்று இரைந்தே படித்தான் படைத் தலைவன்.

"மறியார் கரத்தெந்தை யம்மா துமையோடும்
பிரியாத பெம்மான்...."

- மீதியை அறிய எழுந்த தவிப்பு, அவன் முகத்தில் தெளிவாகவே தெரிந்தது.

"காலிங்கராயா, அடுத்து எங்கே தேடப் போகிறாய்?" சக்கரவர்த்தியின் குரல் மீண்டும் ஒலித்தது.

"பிரபு, நம் கடற்படைத் தலைவர் வண்டுவாஞ்சேரியில் ஆலயமொன்றை எழுப்பியிருக்கிறார். தம்கரத்தின் ரேகைகளை விட சோழ நாட்டை நன்றாக அறிந்தவர். அவர் இதற்கு ஏதும் வழி கூறலாம். அவரைக் கண்டு வரலாமென்றிருக்கிறேன். எப்படியும் அதைக் கண்டு பிடித்து செப்பேடுகளில் பொறிக்க ஏற்பாடு செய்கிறேன் பிரபு."

**வி**டை பெற்றுக் கொண்ட படைத் தலைவனின் ரதம், பாண்டவ ஆற்றை ஒட்டிய பாதையில் விரைந்தது.

ஆற்றை அடுத்த மணல் வெளியில் சோழ வீரர்களுடன் சேர்ந்து பயிற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருந்த கிராமத்து இளைஞர்களைக் கண்ட ரதம் சற்று நிதானித்தது. இதழ்களில் முறுவலொன்று படர இறங்கிய படைத் தலைவன் அவர்களை நெருங்கினான். காற்றில் சலசலத்து கீதம் பாடிய அரச மரத்தின் மறுபுறம் நடந்து கொண்டிருந்த விவாதம் அவன் கவனத்தை ஈர்த்தது.

சிவந்த தேகத்தில் முப்புரிநூலொன்று நனைந்து நெளிய, பயிற்சியிலிருந்து விடுபட்டு வந்தவனாகத் தெரிந்த அந்த வாலிபனின் குரல் உயர்ந்து ஒலித்தது. "தந்தையே, வேதம் ஓதுவதும், இடிந்து கிடக்கும் அந்த ஆலயத்தில் பாடுவதும் உங்களுக்குத் திருப்தியானதாக இருக்கலாம். எனக்கு அதில் நாட்டமில்லை. பொன்னும் பொருளும் சேர்க்க நான் வீரனாகிப் படையில் சேரப் போகிறேன். என்னை வற்புறுத்தாதீர்கள்."

"மகனே, இதற்கா உனக்கு வேதம் பயற்றுவித்தேன். இறையருள்தான் துணைவரும் இறுதிவரை. பொன்னும் பொருளுமல்ல. நம் குலதர்மத்தைப் புறக்கணிக்காதே. என் உடல் நிலை சரியில்லை. இன்று ஒரு நாள் வந்து பதிகம் பாடு. மறுக்காதே மகனே" அந்த முதிய அந்தணரின் குரல் கெஞ்சியது.

சலித்துக் கொண்டே, ஆலயத்தை அடைந்த வாலிபன், தான் விரும்பிய பொன்னையும் பொருளையும் பல நூறு மடங்கு அதிகமாக அந்தப் பதிகம் அளிக்கப் போவதை அறியாமல் கணீரென்ற குரலில் பாட ஆரம்பித்தான்.

"மறியார் கரத்தெந்தை
யம்மா துமையோடும்
பிரியாத பெம்மான்
உறையும் இடமென்பர்
பொறிவாய் வண்டு
தம்பூம் பெடை புல்கி
வெறியார் மலரிற் றுயிலும்
விடைவாயே."

**— விஷ்வக்ஸேனன்**

# வேதபுரத்து வியாபாரிகள்

**இந்திரா பார்த்தசாரதி**

## இதுவரை....

**வே**தபுரம் பற்றி ஒரு புத்தகம் எழுதுவதற்காக வெளிநாட்டிலிருந்து வேதபுரத்திற்கு வருகிறாள் அபூர்வா - பூர்வீக வேதபுரவாசி. புத்தகம் எழுதுவது தொடர்பாக பல்வேறு நிலைகளிலுள்ள அரசியல்வாதிகளைச் சந்திக்கிறாள். அதிலொருவன் நஞ்சுண்டன். அரசியல் சதுரங்கமாடும் அவன், இவளையும் ஆளுங்கட்சியில் சேர்த்து விடுகிறான். இந்த நிலையில் -

திடீரென்று இந்த பிரஸ்தத்துக் கஜானா காணாமல் போகவே, அதைக் கண்டுபிடித்துத் தருவதற்காக வேதபுரத்திலிருந்து அபூர்வா அனுப்பப்படுகிறாள். தற்செயலாக கஜானா கிடைக்க, அது அபூர்வாவின் மூளைத் திறனாக வர்ணிக்கப் படுகிறது.

இந்த நிலையில், இந்திரபிரஸ்தத்தின் தலைவர் கட்சியைச் சேர்ந்த 23 பேரும் - தங்களுக்கிடையிலான கோஷ்டிகள் காரணமாக - தனித்தனியாக அபூர்வாவைச் சந்தித்துத் தங்கள் கட்சியில் சேர்ந்து விடுமாறு கோரிக்கை விடுக்கிறார்கள்...

**'வேதபுரத்தில்தான் தலைவர்களின் பாதங்களைத் தொட்டுக் கும்பிடுதல் என்ற மரபு ஏற்பட்டிருக்க முடியும்; வேற்று நாடுகளில் இம்மரபு தோன்றியிருக்க இயலாது. காரணம், அவ்வேற்று நாடுகள் குளிர்ப் பிரதேசங்கள் என்பதால், அந்நாட்டுத் தலைவர்கள் காலில் எப்பொழுதும் பூட்ஸ் போட்டிருப்பார்கள்; பாதங்களின் நேரடி தரிசனம் கிடைப்பது சாத்தியமில்லை'**

**(பாத பூஜை ஆய்வு - ஆசிரியர்: எஸ்.எம். ஆர்.என். கிருஷ்ணசாமி. பக். 34-35)**

**அ**ன்றிரவு வெகு நேரம் வரை அபூர்வாவுக்குத் தூக்கம் வரவில்லை.

இந்திர பிரஸ்தத்துத் தலைவர், அவர் கட்சியிலுள்ள யாருக்கும் இங்கு மற்றவர்கள் குறை சொல்லும்படி முக்கியத்துவம் கொடுக்க விரும்பவில்லை. அதனால்தான் 'அந்தரங்கச் செய்தி' என்று தனித்தனியாக 23 பேருக்கும் அவளைப் பற்றிய தகவல் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இச் சூழ்நிலையில் இந்தக் கட்சியை எப்படி இங்கு நிலைநிறுத்த முடியும்?

ஒரு பக்கம் அவர், இங்குள்ள வேதபுரத்துத் தலைவரையும் பகைத்துக் கொள்ள விரும்பவில்லை. இன்னொரு பக்கம், இந்திர பிரஸ்தத்து மேலாண்மையையும் அறிவுறுத்த விரும்புகிறார்.

வேதபுரத்திலுள்ள சாதாரண மக்களால், வேதபுரத்துத் தலைவருக்கு மேலே ஓர் அதிகாரம் இருக்கக் கூடுமென்பதைக் கற்பனை செய்து கூட பார்க்க முடியாது.

அவளை வேதபுரத்துத் தலைவர் எதற்காக இந்திர பிரஸ்தத்துக்கு அனுப்பி வைத்தார்? கஜானாவைத் தேடுவதற்கா? அல்லது, அவளை அனுப்பினால் இந்திரபிரஸ்தத்துத் தலைவர் என்ன செய்கிறார் என்று வேவு பார்க்கவா?

காக்கை உட்கார பனம் பழம் விழுந்தது போல், கஜானா கிடைத்தது. இந்திர பிரஸ்தத்துத் தலைவருடைய கட்சிக்கு அவள் தலைமை ஏற்க வேண்டுமென்று இதைத் தொடர்ந்து வந்த வேண்டுகோள். இது வேண்டுகோளா, கட்டளையா?

நேற்று வந்த 23 பேரும், ஒவ்வொருவரும் தன்னைத் தலைவராக நினைத்துக் கொண்டிருக்கும் போது, அவளுக்கு எங்கே இடமிருக்கிறது? 23 பேரும் தலைவருக்கு

ஏதோ ஒரு வகையில் கடன்பட்டிருப்பது போல் தோன்றுகிறது.

அவன் எதிர்ப்பைத் துவக்க வேண்டுமென்றால், அடிப்படையிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். முதலில் இந்தக் கலாசாரச் சூழ்நிலையை மாற்றியாக வேண்டும். அவனால் முடியுமா? உதவி ஏதுமின்றி அவனால் என்ன செய்ய முடியும்?

நஞ்சண்டன் உதவுவானா?

இவ்வாறு எதிர்ப்பைத் துவங்க வேண்டுமென்பதைத் தான் அவன் அவனிடமிருந்து எதிர்பார்க்கின்றானா? அவன் தன்னைச் சுற்றி ஏன் ஒரு மர்ம வலையைப் பின்னிக் கொண்டிருக்கிறான்?

நஞ்சண்டன் இந்திர பிரஸ்தத்துக்கு வரவில்லை என்கிறான். அப்படியானால், அங்கு, அவன் குரலில் பேசியவர் யார்?

அவன் ஏன் வேதபுரத்தில் இருந்தே பேசியிருக்க முடியாது?

அவன் சொன்னபடி, அவன் இந்திர பிரஸ்தத்தில் ஆற்றிய 'சாதனை' ஏன் எந்தப் பத்திரிகையிலும் இடம்பெறவில்லை?

நஞ்சண்டன் இருட்டடிப்புச் செய்தான் என்று வைத்துக் கொண்டால், இதற்கு என்ன காரணம்? தலைவர் கட்டளையா?



பேப்பர் போடும் சப்தம் கேட்டது. மைகாட்! விடிந்து விட்டதா? அவன் எழுந்து போய் ஜன்னல் திரைச் சீலைகளை விலக்கினான். கதவைத் திறந்து கொண்டு செய்தித்தாளை எடுக்கப் போகும் போதுதான் அவன் அதைக் கவனித்தான்.

தூக்கி வாரிப் போட்டது.

வாசலில் போலீஸ்காரர்கள், துப்பாக்கி சகிதம். அவனைக் கைது செய்யப் போகிறார்களா? 'வீட்டுக் கைதியா'?

அவன் வனிதாவின் அறைக்குச் சென்றான்.

"நீ தூங்கிண்டிருக்கே, ரோம் பத்தி எரிஞ்சுண்டிருக்கு" என்று சொல்லியவாறு, தூங்கிக் கொண்டிருந்தவளை அபூர்வா உலுக்கினான்.

"என்ன சொல்றீங்க?" என்றவாறு, படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள் வனிதா.

"வாசல்லே போலீஸ்."

"போலீஸா?"

வனிதா கட்டிலிலிருந்து கீழே குதித்து, வாசலை நோக்கிச் சென்றாள்.

சில விநாடிகள் கழித்து உள்ளே வந்த அவள், "ஆமாம், போலீஸ் தான். இதுக்கு என்ன அர்த்தம்?"

"உன்னோட நஞ்சண்டனைக் கேளு..."

"என்னோட நஞ்சண்டனா?"

"ஆமாம். உன் கொழுந்தனில்லே? முந்தா நா பயமுறுத்தினாரு... இன்னிக்குப் போலீஸையே அனுப்பிச்சுட்டாரு..."

"போலீஸ்காரங்களையே கேக்கவா?"

"கேளு..."

வனிதா 'ட்ரஸ்ஸிங் கவுன்' நாடாவை இறுக முடித்துக் கொண்டு கீழே இறங்கிச் சென்றாள். அபூர்வா 'பால்கனி'க்குச் சென்றாள்.

18

எதிர்த்த வீடுகளில், ஒவ்வொரு வீட்டு வாசலிலும் ஆட்கள் நின்று கொண்டு அவள் வீட்டையே பார்த்துக் கொண்டு நின்றனர். தெருக் கோடியில் ஒரு போலீஸ் ஜீப்.

வனிதா போலீஸ்காரர்களிடம் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தினாலோ என்னவோ, போலீஸ் ஜீப் அவ் வீட்டு வாசலை நெருங்கியது.

ஒரு சப்-இன்ஸ்பெக்டர் கீழே குதித்தார்.

"எஸ், மேடம்" என்றார் சப்-இன்ஸ்பெக்டர்.

"எதுக்காக எங்க வீட்டு வாசல்லே போலீஸ்?" என்றாள் வனிதா.

சப்-இன்ஸ்பெக்டர் மேலே 'பால்கனி'யில் நின்று கொண்டிருந்த அபூர்வாவைப் பார்த்து ஒரு 'ஸல்யூட்' அடித்தார்.

"மேலே வரலாமா மேடம்?" என்று வனிதாவைக் கேட்டார் அவர்.

வனிதா அபூர்வாவைப் பார்த்தாள்.

"வரச் சொல்" என்றாள் அபூர்வா.

சப்-இன்ஸ்பெக்டருக்கு நாற்பது வயதிருக்கலாம். மூச்சிரைக்கப் படியேறி வந்து, "மேடம்... மேலிடத்து உத்தரவு, உங்களுக்குப் பாதுகாப்புத் தரணும்னு..." என்றார்.

"ஏன், எதுக்காகப் பாதுகாப்பு?"

"எனக்குத் தெரியாது, மேடம்..."

"நான் அப்பொ எங்கேயும் தனியா போக முடியாதா?"

"பாதுகாப்புத் துணையுடன் போகலாம், மேடம்."

"எனக்கு இதெல்லாம் வேணாம்னா?"

சப்-இன்ஸ்பெக்டர் முகத்தில் ஒரு வறண்ட புன்னகை. தன்னால் எதுவும் செய்வதற்கில்லை என்பதை அறிவிக்கும் வேதனைப் புன்னகை.

"நான் யார்கிட்டே இது பத்திப் பேசணும்?"

"டி.ஜி. கிட்டே பேசுங்க, மேடம்."

"நம்பர்?"




அவர் கொடுத்தார். 'இது வீட்டு நம்பர், மேடம். வீட்டிலேதானிருப்பார்."

"சரி. நீங்க போகலாம்."

அபூர்வா ஃபோன் செய்தாள்.

"என் பேர் அபூர்வா."

"குட்மார்னிங், மேடம். என்ன உதவி வேண்டும், மேடம்."

"இது என்ன, என் வீட்டு வாசல்லே போலீஸ்?"

"எஸ், மேடம்."

"எதுக்குப் போலீஸ்னு கேக்கறேன். எனக்குப் பாதுகாப்பு வேணாம்."

"மன்னிக்கவும், மேடம். இது மேலிடத்து உத்தரவு..."

"உங்களை விட 'மேலிடம்' எது? நான் யாரைக் கேக்கணும்?"

"தலைவரிடமிருந்து உத்தரவு என்று எனக்கு அறிவிக்கப்பட்டது..."

"உங்களுக்கு யார் அறிவிச்சாங்க...?"

"யார்னு சொல்றது கஷ்டம், மேடம். இது ஒரு 'ஸிஸ்டம்'..."

"நீங்க நேரடியா யார்கிட்டேருந்தும் உத்தரவு வாங்கறது இடையாதா?"

பதிலில்லை.

"நான் இப்பொ என் வீட்டு வாசல்லேருக்கிற போலீஸ்காரங்களை அப்புறப்படுத்தணும்னா என்ன செய்யணும்?"

பதிலில்லை.

அவள் கோபத்துடன் ஃபோனைக் கீழே வைத்தாள்.

"நஞ்சுண்டன்தான் செய்திருப்பாரு..." என்றாள் வனிதா.

"இந்த 'ஸிஸ்டம்' எப்படி வேலை செய்யறதுன்னு எனக்குத் தெரிஞ்சா தேவலை" என்றாள் அபூர்வா.

"நஞ்சுண்டனுக்கு ஃபோன் செய்து பாருங்களேன்," என்றாள் வனிதா.

"அவருக்கு நூத்தெட்டு நம்பர். எங்கேன்னு போய்த் தேடறது?"

"இப்பொ வீட்டிலேதானிருப்பார்," என்றாள் வனிதா.

"நீ 'ட்ரை' பண்ணு. ஐ ஆம் நாட் இன்ட்ரெஸ்டட்" என்று கூறிக் கொண்டே உள்ளே சென்றாள் அபூர்வா.

"அம்மா, அம்மா... இதோ பாருங்க" என்று திடீரென்று உற்சாகம் பொங்கக் கூச்சலிட்டாள் வனிதா.

"என்ன ஆச்சு, எதுக்குக் கத்தறே?" என்று கேட்டுக் கொண்டே அவளிடம் வந்தாள் அபூர்வா.

வனிதா கையில் செய்தித்தாள் இருந்தது. அபூர்வா, அவள் கையிலிருந்த அச் செய்தித்தாளை வாங்கினாள்.

செய்தித்தாள் முழுவதும் அபூர்வா! அவளுடைய பெரிய புகைப்படம். அவள் இந்திரபிரஸ்தத்தில் செய்த சாதனை!

'இந்திரபிரஸ்தத்துக் கஜானா காணாமல் போய் விட்டது. அந் நாட்டுத் தலைவர் உயி



# இந்த நாள் அன்றுபோல் இல்லையே!

1904 : அந்நியர்கள் ஆட்சியின் கீழ் அனுதினமும் விடுதலையே மூச்சு.

1994 : இன்றும் அடிமைப்பட்டுள்ளோம்; ஆனால் விடுதலை எண்ணம் வரவேயில்லை. நாங்கள் அடிமைப்பட்டது எல்லாம் அன்பான சேவை தரும் சிட்டி யூனியன் வங்கியிடம்.

எங்கள் சேமிப்புத் திட்டங்கள்:

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டம்
- ரொக்கப் பத்திரங்கள்
- ஸ்ரீ சக்ரா திட்டம்
- வாமன விசுவரூப திட்டம்
- நிரந்தர வைப்புத் தொகை
- NRI சேமிப்புத் திட்டங்கள்
- CUB ஸ்டாக் இன்வெஸ்ட்

CUB

NINETY YEARS OF CUSTOMER CARE

CUB

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

(அந்நியச் செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி)

பதிவு அலுவலகம்: கும்பகோணம் 612 001.

*CUB: வளர்ச்சிக்கு-உங்கள் வளர்ச்சிக்கு வழிகாட்டும் வங்கி!*

MCS/CUB/1106



"தேர்தல்ல ஜெயிச்சதுக்கப்புறம் இப்பத் தான் முதல் தடவையா நம்ம தொகுதிக்கு வந்திருக்கார் எம்.எல்.ஏ. தொகுதி பூராவும் வீடு விடா போயி..."

"குறை கேட்கப் போகிறாராக்கும்!"

"இல்லே, தீபாவளி இனாம் கேட்கப் போறாராம்!"

- இரா. சம்பத்குமார்

ரினுமினிய நம் இதய தெய்வம் வேதபுரத்துத் தலைவரிடம் கஜானாவைக் கண்டுபிடித்துத் தர உதவி வேண்டினார். பிரபஞ்சத்தின் நிரந்தரத் தலைவர், நம் இதயக் கோயில், அதற்கிசைந்து, அகிலம் புகழும் செல்வி அபூர்வாவை அனுப்பி வைத்தான். செயல் திறனின்றி வேறொன்றுமறியா நம் செம்பொன் மனச் செல்வர், அரும்பெரும் தலைவரின் அருளினால், ஆசியினால், செல்வி அபூர்வா கஜானாவைக் கண்டுபிடித்து, இந்திர பிரஸ்தத்துத் தலைவரிடம் ஒப்படைத்தது, வரலாற்றில் இடம்பெற வேண்டிய சாதனை. இவ்வுதவிக்கு நன்றி கூறும் வகையில், இந்திரபிரஸ்தத்துத் தலைவர், வேதபுரத்துக் குடிசை வாசிகளுக்கு புதிய கூரை வேய்ந்து தருவதாக வாக்களித்திருக்கிறார். இதனால் நம் தலைவர் மனமுவந்து, செல்வி. அபூர்வாவுக்கு 'கருவூலம் காத்த காவல் கன்னி' என்ற பட்டம் அளித்திருக்கிறார்.

"இப்பொழுது புரியுதுங்களா, ஏன் இவ்வளவு பாதுகாப்புப் போலீஸ் இருக்குதுன்னு? நீங்க இப்போ ஒரு வி.ஐ.பி.," என்றாள் வனிதா.

நேற்று எந்தச் செய்தியும் வரவில்லை. இன்று திடீரென்று பத்திரிகைகள் அவளை நட்சத்திர ஸ்தானத்துக்கு உயர்த்தி விட்டன! அப்படியானால், இந்திரபிரஸ்தத்தில் அவர்கள் சொன்னது பொய், அவள், வேதபுரத்துத் தலைவரால் ஓரங்கட்டப்படுவாள் என்பது. அவர்கள் ஏன் அப்படியோர் அபிப்பிராயத்தை அவள் மனத்தில் உருவாக்க முயன்றார்கள்? அப்படியானால், அவள் தேர்தலில் நிறுத்தி வைக்கப்படப் போவது உறுதியாகி விட்டதா? அதற்காகத்தான் இந்தப் பூர்வ பீடிகை விளம்பரமா?

தலைவரைத் தவிர வேறு யாருக்குமே விளம்பரம் இல்லாத நாட்டில், அவளுக்கு மட்டும் ஏன் இந்த அளவுக்கு அவளைப் பற்றிப் பிரசாரம் செய்யப்படுகிறது?

அவளுடைய வாழ்க்கைக் குறிப்பையும் ஒரு பத்திரிகை பிரசுரித்திருந்தது.

அவள் பிறந்த அவ் வேற்று நாட்டில், அவள் ஒன்பது வயதில் கொள்ளைக்காரர்களை அடித்து விரட்டியது பற்றி; பன்னிரண்டு வயதில் அந்நாட்டு அதிபர் கையால், 'வீராங்கனை' என்ற பட்டம் பெற்றது பற்றி; ஏழு வயது முதற்கொண்டு அவளுடைய மூதாதையர் நாடாகிய வேதபுரம் வர வேண்டுமென்று விழைந்தது பற்றி; பதினைந்து வயதில் வேதபுரவியலில் டாக்டர் பட்டம் பெற்றது பற்றி; வேதபுரம் வந்த பிறகு அவளிடம் வாலாட்ட முயன்றவர்களை கராத்தே மூலம் ஒரே வீச்சில் வீழ்த்தியது பற்றி; வேதபுரத் தலைவர் அவளிடம் கொண்டிருக்கும் அன்பு பற்றி...

எல்லாம் பொய்!

அவளைப் பற்றி ஒரு 'மித்'தை உருவாக்கும் முயற்சி! நஞ்சுண்டன்தான் இதற்குக் காரணமாக இருக்க வேண்டும்.

தலைவருடைய ஆசியுடன்தான் அவன் இதைச் செய்திருக்க முடியும்.

தலைவரும், அவளுக்குக் கொடுக்கப்படுகிற இவ்விளம்பரத்துக்கு உடன்படுகிறார் என்றால் இதற்கு என்ன அர்த்தம்?

இவளுக்குத் தலைவருடைய ஆதரவு இருக்கின்றது என்று தெரிந்தால் போதும், வேதபுரத்து அரசியல்வாதிகளைப் பற்றிக் கேட்க வேண்டாம். அவர்கள் காலில் விழுந்து கும்பிட ஒரு ஜோடி பாதங்கள் தேவை, அவ்வளவுதான். பாதுகைகளைப் பட்டமேற்றி வழிபட்ட வரலாறும் இந்நாட்டுக்குண்டு!

இந் நாட்டுத் தலைவர் யார் கண்ணிலும் படாமல் ஒதுங்கியிருப்பதன் காரணம் இப்பொழுது அவளுக்குப் புரிந்தது. பாதங்களின் பாதுகாப்புக்காக! அப்படியிருக்கும் போது தன்னால் நிலைமையைச் எப்படிச் சமாளிக்க முடியுமென்ற அச்சம் அபூர்வாவுக்கு ஏற்பட்டது.

**அ**பூர்வா குளித்து விட்டுக் காலைச் சிற்றுண்டி சாப்பிட, மேஜையருகே உட்கார்ந்தாள்.

டெலிஃபோன் ஒலித்தது.

வனிதா எடுத்தாள்.

"அம்மா, அவரு..."

வனிதா 'அவர்' என்றால் 'நஞ்சுண்டன்'!

அபூர்வா ஃபோனை வனிதாவிடமிருந்து வாங்கினாள்.

"நீங்க தேர்தலுக்கு நிக்க வேணாம். இது மேலிடத்து முடிவு" என்றான் நஞ்சுண்டன்.

"நன்றி... இது எனக்கு ஒரு பெரிய ஆறுதல்," என்றாள் அபூர்வா.

"ஆனா... உங்களைத் தலைவர் துணைத் தலைவரா நியமித்திருக்கிறார். நேரே வந்து சொல்றேன்" என்றான் நஞ்சுண்டன்.

(தொடரும்)

# மக்களின் கருத்துக்கு மதிப்பளித்த மன்னர்கள்!





காளையார் கோயிலுக்கு மிகப் பெரிய தேர் ஒன்று செய்ய மன்னர் பெரிய மருதுபாண்டியர் விரும்பினார். அந்தேரின் அச்சுக்கான மரத்தைப் பல இடங்களிலும் தேடினார்கள். இறுதியில் திருப்புவனத்தில் - வைகையாற்றின் தென் கரையிலுள்ள கோயிலுக்கு எதிரில் - வைரம் பாய்ந்த மரமொன்று இருப்பதாகச் செய்தி வந்தது. உடனடியாக அதை வெட்டி அனுப்பும்படி அங்குள்ள அதிகாரிகளுக்கு உத்தரவு அனுப்பினார்.

மரத்தை வெட்டுவதற்காக ஆட்கள் சென்றதைக் கேள்விப்பட்ட திருப்புவனநாதர் கோயில் குருக்கள்களில் ஒருவரான புஷ்பவனக் குருக்கள் பதறிப் போனார். ஓடோடிச் சென்று அந்த மரத்தை வெட்ட வேண்டாமென்று தடுத்துவிட்டார்.

விஷயத்தை மன்னருக்குத் தெரியப்படுத்தினார்கள், அதிகாரிகள். 'காளீஸ்வரரின் திருத்தேருக்காக மன்னனான நான் அனுப்பிய ஆணையையும் ஒருவர் எதிர்க்கிறாரா! ஆச்சரியமாக இருக்கிறதே!' என்று நினைத்த பெரிய மருது, விஷயத்தை முழுமையாக விசாரித்தறிய தாமே நேரில் புறப்பட்டுச் சென்று குருக்களை விசாரித்தார்.

"என்ன காரணத்துக்காகத் தடுத்தீர், அதுவும் கோயில் தேருக்காக நான் வெட்டச் சொல்லியிருக்கும் போது?"

"இந்த மரத்தை வெட்டி விட்டால், பிரார்த்தனைக்காக அயலூர்களிலிருந்து குழந்தை குட்டிகளோடு வரும் பக்தர்கள் வெயில் காலத்தில் ஓய்வெடுக்க நிழலின்றிக் கஷ்டப்படுவார்கள். ஆற்றைக் கடந்து அக்கரையிலிருந்து வருவோரும் இந்த மர நிழலில் ஓய்வெடுத்து விட்டுத்தான் செல்கிறார்கள். அதனால் இந்த மரத்தைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு மகாராஜாவான தங்களின் நினைவுதான் வரும். காரணம், இது 'மருதமரம்' என்று தங்களின் பெயரைத் தாங்கியிருக்கிறது என்பது மட்டுமல்ல; எப்படி தாங்கள் நல்லாட்சி செய்து பிரஜைகளின் உள்ளங்களைக் குளிரச் செய்கிறீர்களோ, அது போலவே இந்த மரமும் ஜனங்களுடைய களைப்பைப் போக்கி அவர்களின் உள்ளங்களைக் குளிரச் செய்கிறது. இந்த நிலையில் இம்மரத்தை வெட்டுவதற்கு நான் எப்படிச் சம்மதம் கொடுப்பேன்? மகாராஜா நினைத்தால் வேறெங்காவது தேடி வேறொரு மரத்தை வெட்டச் செய்து தேர் செய்யலாமே!" என்றார் குருக்கள்.

மருது பாண்டியர் ஆச்சரியப்பட்டுப் போய், இந்த மரத்தில் இத்தனை பயன்களா என்று வியந்து, வேறொரு மரத்துக்கு ஏற்பாடு செய்யுமாறு அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார். குருக்களைப் பாராட்டினார்.

- இது போல் இன்னும் எத்தனையெத்தனையோ அரிய பல செய்திகளை ஆராய்ச்சி என்னும் உரைகல்லில் உரைத்துப் பார்த்து - ஒப்பிட்டுச் சுவாரஸ்யமாகச் சொல்லியிருக்கிறார், "மருது பாண்டிய மன்னர்கள்" என்னும் நூலின் ஆசிரியரான மீ. மனோகரன்.

*(வெளியீடு : அன்னம் பதிப்பகம், 2, சிவன் கோயில் தெற்குத் தெரு, சிவகங்கை - 623 560; பக்கம் : 756; விலை ரூ. 160/-)*

— பிரின்ஸ்



**"என்னது லேட்டஸ்ட் அரசியல் வெடியா?"**

**"ஆமாங்க, வெடிக்கும் போது 'அம்மா தாயே அனைத்தும் நீயே'ன்னு சப்தம் கேட்கும்!"**

**— தஞ்சாவூர் ராஜபாரதி**



# இது சுயசரிதை சீசன்!

இதுவரை சுயசரிதை எழுதாத (அல்லது எழுதியுள்ள) பிரமுகர்களுக்கு எவ்வளவு ஜோராக எழுதலாம் என்பதற்கு இதோ சில டிப்ஸ்!

**சோ :**

நான் நாடகம், சினிமா, பத்திரிகை என்று எல்லாத் துறைகளிலும் காலடி எடுத்து வைக்கக் காரணமே காமராஜர்தான். "இப்படித்தான் மக்களைக் கவரணும்னேன். மக்களைச் சிந்திக்க வைக்கணும்னேன்" என்றார். என் நாடகத்தை ஒருமுறை பார்த்துவிட்டு, "கோவாடிஸ்னு ஏன் செருப்போட பேர் வைச்சே நாடகத்துக்கு?"ன்னு கேட்டார். அது பாட்டா ஷூ என்று அவருக்குத் தெரிந்திருக்கிறதே என அதிசயித்துப் போனேன். இதற்குப் பிறகு 'என்று தணியும் இந்த சுதந்திர தாகம்?' என்ற நாடகத்துக்கு, நான் பெரிதும் மதிக்கும் மொரார்ஜி தேசாய் தலைமை வகித்தார். "தாகம் தீரணும்னா தண்ணீர் மட்டும் குடிச்சுப் பயனில்லை" என்று அவர் சொன்ன போது, கைதட்டலில் அரங்கம் அதிர்ந்தது. இதெல்லாம் யாருக்கும் தெரியாது. சந்திரசேகருக்கும், சுப்பிரமணிய சுவாமிக்கும் மட்டும்தான் தெரியும். இப்போது கேட்டால் சுப்பிரமணிய சுவாமி தமக்குத் தெரியாது என்று சொல்லி விடுவார். ஏனென்றால், அவர் காங்கிரசில் சேரப் போகிறார் என்று நான் 15.3.75 தேதியிட்ட துக்ளக் கேள்வி-பதிலிலேயே எழுதியிருக்கிறேன்.



**கலைஞர் (நெஞ்சுக்கு நீதிக்கு அனுபந்தம்) :**



அண்ணாவும் நானும் எவ்வளவு நெருக்கமாகப் பழகியவர்கள் என்பது அனைவருக்கும் தெரிந்திட்ட ஒன்று. பக்கத்தில் பக்கத்தில் அமர்ந்திட்ட போது எல்லாம் கூட அவர் சொல்லுவதுண்டு. "தம்பீ, என் இதயத்தில் நீதான் இடத்தைப் பிடித்திருக்கிறாய்" என்று. ஏனென்றால், அத்தனை பக்கத்தில் அமர்ந்திருப்போம். ஆனால், இந்த நெருக்கத்தை விரும்பாத சிலர் அன்றே அவரிடம் இல்லாததையும் பொல்லாததையும் சொன்ன போது, "வடவர்கள் எல்லாம் நம்மவரும் அல்லர். நல்லவரும் அல்லர்!" என்றார் அண்ணா. வைகோ, வடக்கே எம்பியாக இருந்து வருகிற ஒருவரைத்தான் அண்ணா இப்படிக் குறிப்பிடுகிறார் என்று இப்போதுதானே எனக்கு விளங்கிடுகிறது. வையகோ! எதையும் தாங்கும் இதயம் வேண்டும் என்று அவர் சொன்னதும் இதற்குத்தானோ!

**கி. வீரமணி :**



ஐயா அவர்கள் என்றைக்கு என்னிடம் திராவிடர் கழகப் பொறுப்பை ஒப்படைத்தார்களோ அன்றே, சமூக நீதி காத்த வீராங்கனை, புரட்சித் தலைவி அவர்கள் திரைப் படத் துறையில் லட்சம் லட்சமாகச் சம்பாதிக்கும் நட்சத்திரமாக இருந்தார். அப்போதே என்னிடம் ஒரு படப் பிடிப்பிலிருந்து படபடப்புடன் வெளியே வந்து, "உங்களுக்கு ஒரு பத்து லட்சம் ரூபாய் தருகிறேன். பெரியார் அவர்களுடைய கொள்கைகளைப் பட்டி தொட்டி எங்கும் பரப்புங்கள்" என்றார். நான்தான் 'சமயம் வரட்டும்' என்றேன். அன்றைக்குப் பத்து லட்சம் ஏற்பதாகக் கோடி காட்டியிருந்தால், எனக்கு இன்று கிடைத்ததற்கு இரண்டு மடங்கு அன்றே கிடைத்திருக்கும். இதை அறியாத பார்ப்பன ஏடுகள், நான் ஐந்து லட்சத்துக்கு அடிமையாகி விட்டதாகக் கதை கட்டி விடுகின்றனர். எனக்குத் தெரியும் இது யார் செய்த சூழ்ச்சி என்று. கிண்டி ராஜ்பவனத்துச் சிண்டு முடியும் வேலை இது. நான் நாள் தோறும் வணங்கும் புரட்சித்தலைவியின் மீது ஆணையாகச் சொல்லுகிறேன். நான் விலை போய் விட்டதற்கு ஆதாரமே இல்லை.

— சாருகேசி



# திருப்பம்

ஒரு துண்டுக் கயிற்றைக் கையில் எடுத்துக் கொண்டு, ஏதுமறியாமல் எதிரே உட்கார்ந்திருந்த அப்பாவிப் பையனின் கழுத்தில் இறுக்கிக் கொலை செய்யும் நோக்கத்தோடு நெருங்கி வந்து கொண்டிருந்தவனை, எதிர்பாராதவிதமாக கீழே நெளிந்த ஒரு நல்ல பாம்பு தீண்டி விட, அவன் மயங்கி விழுந்தான்.

“உனக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுக்கிறோம்!”

பிச்சையெடுத்துக் கொண்டிருந்த மாரிக்கு இது பெருந்தொகையாகத் தோன்றியது.

“என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள்!” என்றான்.

“ஒரு சின்னப் பையனைக் கடத்திக் கொண்டு வர வேண்டும். இந்தப் போட்டோவைப் பார்!” என்று சொல்லி ஒரு படத்தைக் கொடுத்தார்கள்.

அதில் ஒரு சிறுவன் செழிப்பாகச் சிரித்துக் கொண்டிருந்தான்.

“யார் இந்தப் பையன்?”

“இவன் பெயர் பாபு.. இவன் அப்பா ஒரு பெரிய தொழிலதிபர். ஏகப்பட்ட கம்பெனிகளுக்குச் சொந்தக்காரர்... பையனைக் கடத்தி வச்சிக்கிட்டு மிரட்டினா பணம் குடுப்பார்!”

“சரி... இதுலே நான் செய்ய வேண்டியது என்ன?”

“பையனை கடத்திக்கிட்டு வரணும்... ஊருக்கு வெளியே காட்டுக்குள்ளே ஒரு பாழடைஞ்ச கட்டடம் இருக்கு.. அங்கே பையனை வச்சிக்கிட்டு இருக்கணும். அவ்வளவுதான். மத்ததெல்லாம் நாங்க பாத்துக்கறோம்.”

“இப்ப பையன் எங்கே இருப்பான்?”

“சிறிய மலர் உயர்நிலைப் பள்ளி தெரியும்லே?”

“தெரியும்!”

“பாபு அங்கேதான் படிக்கிறான்!”

“எந்த வகுப்பு?”

“ஒன்பதாம் வகுப்பு!”

மாரி அந்தப் பள்ளிக் கூடத்துக்குப் போய்... ஒன்பதாம் வகுப்பைக் கண்டு பிடித்த போது - அங்கே முதல் உதவி பற்றிய பாடம் நடந்து கொண்டிருந்தது. வகுப்பு முடியும் வரை காத்திருந்து

“தம்பி! என்னை அடையாளம் தெரியுதா?”

“இல்லையே!”

“உங்க பாக்ட்ரியிலே வேலை செய்யிற தொழிலாளி நான்... அப்பா உன்னை அவசரமா அழைச்சிக்கிட்டு வரச் சொன்னார்!”

மறுநாள்.

ஊருக்கு வெளியே காட்டுக்குள் அந்த பாழடைந்த கட்டடத்தில் பையனை வைத்துக் கொண்டு காத்திருந்த போது மாரிக்கு அந்த சேதி வந்தது.

“மாரி...! வேறே வழி இல்லே... பையனைக் கொன்று கிணத்துலே போட்டுடு! அவன் உயிரோட இருந்தா நமக்கு ஆபத்து!”

“என்ன.. என்ன சொல்றீங்க?”

“பையனோட அப்பாவை போன்லே மிரட்டினோம். பத்து லட்சம் வேணும்ன்னு! பாபு உயிரோட வேணும்ன்னா பணத்தோட காளிகோயில் பக்கம் வரச் சொன்னோம்!”

“வந்தாரா?”

“வரலே...! அவர் போலீசுக்குப் போயிட்டார்!”

“இப்ப என்ன செய்யறது?”

“நாங்க தப்பிச்சிப் போயிடறோம். நீ பையனைத் தீர்த்துக்கட்டி கிணத்துலே வீசிட்டுத் தலைமறைவாயிடு!”

மயக்கம் தெளிகிறது.

மாரிக்கு மெல்ல நினைவு திரும்புகிறது.

எதிரே

பாபு நின்று கொண்டிருக்கிறான்.

“பயப்படாதீங்க... இனிமே ஆபத்தில்லே! விஷப் பாம்பு கடிச்சா என்ன பண்ணணும்ன்னு எங்க வகுப்புலே சொல்லிக் குடுத்திருக்காங்க! கடிவாய்க்கு மேலே கட்டுப் போட்டு... கடிச்ச இடத்துலே கீறி ரத்தத்தை உறிஞ்சி எடுத்துடணும். அதைத்தான் செஞ்சிருக்கேன்.

மாரி நன்றியோடு கலங்கிய தன் விழிகளைத் தாழ்த்துகிறான்.

கழுத்தை இறுக்குவதற்காக கொண்டு வந்த கயிறு .

அவன் காலை இறுக்கிக் கொண்டிருக்கிறது.

— தென்கச்சி
கோ. சுவாமிநாதன்

*We are proud to announce that our deposit crosses more than one crore with the valuable support of our shareholders*

# சுலிவன் கார்டன் பெனிபிட் பண்டு லிமிடெட்

SBF

பதிவு அலுவலகம் : 8, கற்பகாம்பாள் நகர்,
மைலாப்பூர், சென்னை - 600 004. போன் : 4993241/4990953
கிளை அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு,
பார்க் டவுன் (முதல் மாடி), சென்னை - 600 003. போன் : 563055

**ரொக்க நடவடிக்கை : காலை 8.30 முதல் மாலை 5.30 வரை**
**ஞாயிறு காலை 8.30 முதல் பகல் 12.30 வரை**
**வரவு செலவுகள் அங்கத்தினர்களுடன் மட்டுமே**
**(வெள்ளிக் கிழமை விடுமுறை)**

**கடன்** நகைகள் பேரில் கிராம் 10க்கு ரூ. 3000/- வழங்கப்படும்.

## இயக்குநர்கள்

| பெயர் | விலாசம் | தொழில் |
|---|---|---|
| திரு T.V. சீனிவாசன் | 15 லஸ் அவின்யூ சென்னை - 4 | நிதி ஆலோசகர் Formerly SBI |
| திரு P.K. சந்திரசேகரன் | 89 போயஸ் கார்டன் சென்னை- 86 | P.K. வடிவம்மாள் குரூப் இரும்பு வியாபாரம் |
| திரு ப்ரவின் கோவிந்தராவ் | 22 போயஸ் கார்டன் சென்னை - 86 | Architect P.S. Govind Rao, Madras. |
| திருமதி P.C. சுந்தரவதனி | 89 போயஸ் கார்டன் சென்னை - 86 | சுந்தரவதனி கல்யாண மண்டபம், எழும்பூர், சென்னை-7 ☎ 8281078 |
| திரு P.K.C. ரமேஷ் | 89 போயஸ் கார்டன் சென்னை - 86 | பிரசாந்த் ஸ்டீல்ஸ் |
| திரு D. தனுஷ்கோடி | 21/1A பழைய குயவர்பாளையம், மதுரை - 625 009 | Nippon Furniture, Madurai. |
| திரு P.C. பாஸ்கர் | 89 போயஸ் கார்டன் சென்னை - 86 | Annamalai Steels |
| திரு K.R. நிரஞ்ஜன் குமார் | 1 பின்னி ரோடு சென்னை - 86 | K.V.R. பஸ் சர்வீஸ் சென்னை. |
| திரு P.C. சியாம் சுந்தர் | 89 போயஸ் கார்டன் சென்னை -86 | Deepu Steels |
| திரு K.G. கிருஷ்ணன் | Y-210, 2வது அவின்யூ சென்னை - 40. | ஜெனரல் ஃபாப்ரி கேட்டர்ஸ் (பி) லிமிடெட் |

**சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி**

# மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம்-8





தீபாவளியையொட்டி இந்த சுவாரஸ்யப் போட்டி. கீழே கூப்பனில் ஆறு பொருள்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. அவற்றைப் பின்வருவோரில் யாருக்கு எதை ஒப்பிடலாம்? 1. மன்மோகன்சிங்; 2. ஜெயலலிதா; 3. வாழப்பாடி; 4. சு. சுவாமி; 5. நரசிம்மராவ்; 6. மு. க. நேருக்கு நேர் எழுதி விலாசம் பூர்த்தி செய்து வைத்துக் கொள்ளவும். 26 வாரங்களுக்குப் பிறகு மொத்தமாக எல்லா கூப்பன்களையும் சேர்த்து அனுப்பவும். மிக அதிக போட்டிகளில் கலந்து கொண்டு மிக அதிக வெற்றி பெற்றவருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு! ஆறுதல் பரிசுகளும் உண்டு. எல்லா போட்டிகளுக்கும் சரியான விடைகள், முடிவு தேதிக்குப் பிறகு வெளியிடப்படும். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.









| போட்டி - 8 | |
|---|---|
| 1) எண்ணெய்க் குளியல் | |
| 2) புஸ்வாணம் | |
| 3) சரப் பட்டாசு | |
| 4) ஊசி வெடி | |
| 5) மத்தாப்பு | |
| 6) தீபாவளி மருந்து | |

என் பெயர் : ..........................................................................................

விலாசம் : ..........................................................................................

# தடவை சொல்லியாச்சு

இப்படி ஒரு அத்துவானத்திலா வீடு கட்டுவார்கள்? காலையில் கிரகப்பிரவேசம்! இரவில் விருந்து! ஆறு மணிக்குள் அவள் வந்திருக்க வேண்டும். தாமதமாகி விட்டது. இப்படி இருட்டில் சிக்கிக் கொண்டு...

திரும்பவும் அந்தக் கடைக்குப் போய்க் கேட்க வேண்டியதுதான்! ஏற்கெனவே இரண்டு முறை கேட்டாயிற்று.

சுமதி திரும்பினாள். பளீர் என்ற வெளிச்சத்தில் சற்று தூரத்தில் அவள் கடந்த கடை இருந்தது.

"ஏங்க! ரோடே வரல்லைங்க! எங்கே இருக்கு?" என்றாள் கெஞ்சலாக.

முதலாளி கணக்குப் பார்க்கும் நேரம்! ஒரே எரிச்சல்!

"ஏம்மா பத்து தடவை சொல்லியாச்சு! புரிஞ்சுக்காட்டி என்னம்மா! இந்தா! பிரகாசம், நீ அந்த ரோட்டைக் காட்டு..." என்றார்.

நல்லவேளை. ரோட்டைக் காண்பித்து விட்டு பிரகாசம் திரும்பிப் போனான்.

நடந்தாள். ரோடு பாதி தெரிந்தும், தெரியாமலும் இருந்தது. சுற்றி வர வீடு கிடையாது.

அந்தச் சப்தம் அவளை உலுக்கியது. யாரோ பின்னால் வரும் கால் தடம்.

திரும்பிப் பார்த்தாள். சற்றுத் தொலைவில் அந்தக் கறுப்பு உருவம் தெரிந்தது.

யார் அது? யாராவது சாதாரண ஆளாக இருக்கும். வீண் பயம் எதற்கு?

மேலே நடந்தாள். சிறிது தூரம் சென்ற பிறகு திரும்பிப் பார்த்தாள். பக்கென்றது மனம்! நிச்சயம் அந்த உருவம் பின்னால் வந்து கொண்டிருந்தது.

'கடவுளே இப்படி மாட்டிக் கொள்ள வேண்டுமா!'

தூரத்தில் பழம் கோவில் அவள் கண்களில் பட்டு விட்டது. அதன் பக்கம் போனால், அந்த பங்களா வெளிச்சம் தெரிந்து விடும் என்றார் கடைக்காரர். வேகமாக நடந்தாள். திரும்பிப் பார்த்தாள். கடவுளே! அந்த உருவம் அவள் போகும் வழியில் திரும்பி விட்டது. வலுவான ஆண் உருவம்.

கத்தலாமா! யாருக்குக் கேட்கும்!

கோவில் நோக்கி வேகமாக ஓட ஆரம்பித்தாள்.

திடீரென்று ஸாரி இழுபட்ட உணர்ச்சி! ஒரு செடிக் கிளைதான் அவளை இழுத்திருக்கிறது.

ஸாரியை மெள்ள விடுவித்தாள். பின்புறம் பார்த்த போது அந்த ஆள் சற்று எட்டத்தில் வந்து விட்டான்.

ஓட்டமாக ஓட கோவில் நெருங்கி விட்டது. கோவிலில் வெளிச்சம் இருந்தது. உள்ளே யாராவது இருக்க வேண்டும்.

ஓடி வந்து வாசலில் நிற்க, குருக்கள் வெளியே வந்து கொண்டிருந்தார். ஆசுவாசமாகி, திரும்பிய போது, அந்த ஆள் அவளை நோக்கி வருவது தெரிந்தது. அவள் இப்போது பயப்படவில்லை.

பாண்டும், சட்டையும் போட்டிருந்தான். களைத்திருந்தான். இளைத்தவாறு அவள் அருகே வந்து நின்றான்.

"மிஸ்டர் என்னை ஏன் பின்பற்றி வந்தீங்க?"

"ஸீ-ஃபுட்' கம்பெனி டைரக்டர் வீட்டுக்குப் போறீங்களா? கிரகப்பிரவேசத்துக்கு...?" என்றான் அவன்.

அவளுக்கு எரிச்சல் மண்டி வந்தது.

"ஆமாம்."

"ஸாரி மேடம்! வர வழியிலே அந்தக் கடையிலே கேட்டேன்! 'ஸார்! நூறு பேருக்குச் சொல்லியாச்சு! ஒவ்வொருத்தருக்கும் பத்துத் தடவை சொல்லியாச்சு!



இப்பத்தான் ஒரு பெண் போனாங்க! அவங்க பின்னாலே போங்க! அவங்க அங்கேதான் போறாங்க! அவங்ககிட்ட விவரமா வழி சொல்லியிருக்கோம்'னு சொன்னாங்க! அதனாலேதான் உங்களைப் பின்பற்றினேன். ஸாரி!"

— புஷ்பாதங்கதுரை



"இதுதான் கட்-அவுட் வெடி! வெடிச்சவுடனே நம்ம தலைவரோட சின்ன கட்-அவுட் வரும்!"

- [illegible]

சமீபகாலமாக, தமிழ் சினிமா ஹீரோக்கள் அத்தனை பேருமே அடிதடி ராஜாக்களாகத்தான் இருக்கிறார்கள். ஸாஃப்ட் ஹீரோயிஸம் போணியாகிற காலம் மலையேறி விட்டதோ என எண்ணும் வேளையில், 'உள்ளேன் ஐயா' என்று எட்டிப் பார்த்தவர் அரவிந்த்சாமி. மனுஷர் மிகவும் ரிஸர்வ்ட் டைப்; பத்திரிகையாளர் யாரோடும் அதிகம் பேச மாட்டார் என்கிற வதந்திகளை உடைத்தெறிந்து நம்மோடு ஒரு மாலைப் பொழுதின் ஒரு மணி நேரத்தை தீபாவளிச் சிறப்பிதழுக்காகச் செலவழித்தார்.

மங்கலான வெளிச்சம். நிறைய நாற்காலிகள். ஒரு சில ஷீல்டுகள். புத்தகங்கள். டெலிபோன். சப்தம் போடாத ஃபேன். பர்ஃபியூம் மணம் கமழ இயல்பான குரலில் தலையைக் கோதியபடி பேச ஆரம்பித்தார். சட்சட்டென்று பேச்சு, ஆங்கிலத்திற்குத் தாவி விடுகிறது. ஒரு காப்பி, இரண்டு சிகரெட்டுகளுக்கிடையே அவர் அளித்த ஒரு மணி நேரப் பேட்டி இங்கே :

**"சின்ன வயசு ஞாபகங்கள் ஏதும் இருக்கிறதா?"**

"ஓயெஸ். டான்பாஸ்கோ. அதற்கு முன் ஒரு கான்வென்ட். தீவிரமான படிப்பு. ஜாலியான பொழுதுபோக்கு. வீடு, ஸ்கூல், விளையாட்டு. அவ்வளவுதான். பின்னாளில் மாடலிங் செய்த போது கூட சினிமா ஆசை, ஆர்வம், எதுவும் இல்லை. என் ரஸ்னா, லியோ காப்பி விளம்பரங்களைப் பார்த்துத்தான் மணிரத்னம் நடிக்கக் கூப்பிட்டார். கேஷுவலாகத்தான் நடிக்க வந்தேன்."

**"தளபதி - முதல் படம். இரண்டு பெரிய ஹீரோக்களின் பின்னால் இருந்து நடித்தது - பிற்கால வாய்ப்புக்கள் பாதிக்கப்படுமோ என்கிற 'காம்ப்ளக்ஸ்' ஏதும் வரவில்லையா?"**

"ஒருவேளை ஹீரோவாகி விட வேண்டுமென்கிற ஆர்வம் - வெறி இருந்திருந்தால் அப்படித் தோன்றியிருக்குமோ என்னமோ! எனக்கு அப்போது அந்த மாதிரி உணர்வுகள் ஏதும் இல்லை. மணிரத்னம் சொன்னார்; செய்தேன். தட்ஸ் ஆல்."

**"தளபதியிலும் சரி, ரோஜாவிலும் சரி நீங்கள் நடித்த கதாபாத்திரங்கள் உங்களையொரு மென்மையான - யதார்த்த வாழ்வில் தென்படுகிற - ஒரு அப்பர் மிடில் கிளாஸ் ஹீரோவாகத்தான் உங்களை அடையாளம் காட்டின. பிறகு நீங்கள் 'தாலாட்டு' படத்தில் ஒரு கிராமத்து இளைஞனாகத் தோன்றிய போது அது உங்களுக்குப் பொருந்தாத ஒரு கதாபாத்திரம் போல்தான் இருந்தது..."**

"எனது முதலிரண்டு படங்களில் ஏற்பட்ட இமேஜை உடைக்க வேண்டுமென்றே நான் எண்ணினேன். அதனால்தான் அப்படியொரு கேரக்டர் வாய்ப்பு வந்த போது ஒப்புக் கொண்டேன்."

**"ஆயினும் அந்த இமேஜ் உடைந்ததாகத் தெரியவில்லையே. உங்களுக்குப் பொருந்தாத கேரக்டர் ரோலாகத்தான் பட்டது."**

"உங்களுக்கு அப்படியிருந்திருக்கலாம். ஆனால் கிராமப்புறங்களில் நல்ல வரவேற்பு இருந்தது."

**"மறுபடியும் படத்தில் மறுபடி அதே மாதிரி ஸாஃப்ட் ரோல் செய்த போது 'ரோஜா'வுக்குக் கிடைத்த அதே பெரிய வரவேற்பு மீண்டும் கிடைத்ததே? அந்த அளவுக்கு 'தாலாட்டில்' பாராட்டு கிடைத்ததாகத் தெரியவில்லையே?"**

"வாஸ்தவம்தான். மறுபடியும் கேரக்டர்ஒரு வித்தியாசமான கேரக்டர். ஆனால், அந்த கேரக்டரில் என்னுடைய நடிப்பு எனக்கே திருப்திகரமாக இல்லை. பாலு மகேந்திரா சாரிடமே அதைச் சொன்னேன். அவர், 'இல்லை அரவிந்த்! நீ நன்றாகத்தான் செய்திருக்கிறாய்' என்று கூறினார். ஆனால் என் மனதிற்கென்னவோ அந்தப் படத்தின் ஒரிஜினலான இந்தியில், அந்த கேரக்டரை ஏற்று நடித்த நடிகர் ராஜ்கிரண் சிறப்பாகச் செய்திருந்தார் - அவர் என்னைவிடச் சிறப்பாகச் செய்திருந்தார் என்று தோன்றுகிறது. அதே கேரக்டரை நான் இப்போது செய்திருந்தால் இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாம் என்று எண்ணுகிறேன்.

**"ரோஜா இந்தியில் வெளியான போது, உங்களுக்கு அனைத்திந்திய அளவில் புகழ் கிடைத்தது. அப்போது இந்திப் பட வாய்ப்புக்கள் வந்திருக்குமே?"**

"வந்தது. ஆனால் எல்லாமே வழக்கமான கேரக்டர்கள் என்பதால் எனக்குப் பிடிக்கவில்லை. மறுத்துவிட்டேன்."

**"வேற்று மொழிப் பட வாய்ப்புக்களே இல்லையா?"**

"தெலுங்

ஒரு மென்மையா
கதாநாயகன்

இல் செய்து கொண்டிருக்கிறேன்."

"வேற்று மொழிப் படங்களில் நடிக்கிற போது, அந்த மொழிகள் தெரியாததால் முழுமையான நடிப்புத் திறமையைக் காட்ட முடியாமல் போகும் வாய்ப்பு இருப்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?"

"அப்படிச் சொல்ல முடியாது. ஆயினும் மொழி தெரியாத காரணத்தால் நம்முடைய ஆலோசனைகளை - அபிப்பிராயங்களை - வெளிப்படுத்த முடியாமல் போய் விடுகிறது. அதுவொரு மைனஸ் பாயின்ட் தான்!"

**"உங்களை அதிகப் படங்களில் பார்க்க முடியாததற்கு என்ன காரணம்? ஒருபுறம் உங்கள் பிஸினஸிலும் கவனம் செலுத்துவது தான் காரணமோ?"**



"அப்படியில்லை. அடிக்கடி எனது படங்கள் வெளியாகிற போது, எனது முகத்தைப் பார்க்க எனக்கே போரடித்து விடும் என்றுதான் நினைக்கிறேன். அதனால்தான் இடைவெளி இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன்."

**"நீங்கள் இனிமேல் நடிக்கப் போவதில்லையென்றும் அமெரிக்காவில் போய் செட்டிலாகப் போவதாகவும் செய்திகள் வந்தனவே?"**

"அதெல்லாம் வெறும் வதந்திகள். உண்மையல்ல! நான் சினிமாவில்தான் தொடர்ந்து நடிக்கப் போகிறேன்."

**"அவார்டு ... ங் ஷ ன் ...போன்ற பொது ...நிகழ்ச்சிகளில் உங்களைப் பார்க்கவே முடிவதில்லையே. அண்மையில் நடந்த உண்ணாவிர ...த்தில் கூட நீங்கள் கலந்து கொள்ளவில்லையே?"**

"பொதுவாகவே எனக்குப் பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் ஆர்வம் இல்லை. உண்ணாவிரதத்தன்று நான் பிஸினஸ் விஷயமாக வெளியூரில் இருந்தேன். அதனால்தான் கலந்து கொள்ளவில்லை."

**"சினிமா உலகம் சம்பந்தப்பட்ட பொது நிகழ்ச்சிகளுக்கு வரும் உங்கள் ரசிகர்கள் உங்களைக் காணாமல் ஏமாற்றமடைய மாட்டார்களா?"**

"என்னை அங்குதான் பார்க்க வேண்டுமென்பதில்லையே. உண்மையிலேயே என்னைப் பார்க்க விரும்பினால் என்னுடைய வீட்டுக்கு வந்து கூடப் பார்க்கலாமே."

**"நீங்கள் மணிரத்னத்திடம் உதவி டைரக்டராகவும் பணியாற்றுவதாகச் சொல்லப்படுகிறதே?"**

"உதவி டைரக்டராகவெல்லாம் பணியாற்றவில்லை. ஆயினும் டைரக்ஷன் துறையில் எனக்கு ஈடுபாடு உண்டு. ஒரு படம்




டைரக்ட் செய்ய வேண்டும் என்கிற ஆர்வமும் உண்டு. நிச்சயம் செய்வேன்."

**"இப்போது டெலிவிஷனில் ஏகப்பட்ட சேனல்கள். சினிமாவைப் போலவே அல்லது சினிமாவை விடவும் பிரம்மாண்டமான முறைகளில் ஒளிபரப்பப்படும் தொடர்கள் - நிகழ்ச்சிகள்.... இதனாலெல்லாம் சினிமாவுக்கு பாதிப்பு என்கிற கருத்து பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

"இதுவரை சினிமாக்காரர்கள் மட்டும்தான் விஷுவல் மீடியத்தைக் கையில் வைத்திருந்தார்கள். அதனால் அவர்கள் என்ன கொடுக்கிறார்களோ அதுதான் சினிமா என்றும் விஷுவலாக இப்படித்தான் கொடுக்க முடியும் என்றும் மக்கள் கருத வேண்டிய கட்டாயத்திலிருந்தார்கள். இப்போது டெலிவிஷன் அந்த ஏகபோகத்தை முடித்து நொறுக்கி விட்டது. சினிமாக்காரர்கள் கொடுப்பதை மட்டுமே பார்த்து ரசிக்க வேண்டிய கட்டாயம் இனி மக்களுக்கு இல்லை. எது சிறந்த விஷுவல் என்பதைத் தேர்ந்தெடுக்கிற வாய்ப்பு மக்களுக்கு நிறைய ஏற்பட்டிருக்கிறது. டெலிவிஷனால். ஒரு சுதந்திர நாட்டில் இந்த வாய்ப்பை மறுக்கவோ எதிர்க்கவோ கூடாது; முடியாது. எனவே, டெலிவிஷன் என்பது சினிமாத்துறையினரை மேலும் கடுமையாக உழைக்கத் தூண்டும் ஒரு கருவியாகத்தான் கருதுகிறேனே தவிர, எதிரியாக அல்ல!"

**"உங்கள் மனைவிக்குச் சினிமாவில் ஆர்வம் உண்டா?"**

"நீங்கள் எந்த ஆர்வத்தைச் சொல்லுகிறீர்கள் என்று தெரியவில்லை. நடிக்கிற ஆர்வமா என்றால் இல்லை. எனது படங்களைப் பார்த்து விமர்சிக்கிற ஆர்வம் நிறையவே இருக்கிறது!"

**"நீங்கள் பொதுவாகவே பத்திரிகைகளுக்கு அதிகம் பேட்டி தருவதில்லையே, ஏன்?"**

"நான் அதிகப் படங்களில் நடிக்க விரும்பாததால் என்னிடம் அடிக்கடி பேட்டி கொடுப்பதற்கான விஷயங்கள் இருப்பதில்லை. உதாரணத்திற்கு இன்று உங்களுக்குப் பேட்டி தருகிறேன் என்கிற நிலையில் இன்னும் ஒரு வாரம் கழித்து வேறொரு பத்திரிகையாளர் என்னைப் பேட்டிக்கு அணுகினால் என்னிடம் பேசுவதற்குப் புதிதாக என்ன இருக்கப் போகிறது? சொன்னதையேதான் திரும்பச் சொல்ல வேண்டும். அது எனக்கும் போர்; படிப்பவர்களுக்கும் போர்! இதுதான் காரணம்."

**— ஜீ. ஆத்மா**

அட்டை வண்ணப்படம், படம் :
**பிரவீன்குமார்**

"அம்பாசமுத்திரம் சித்தப்பா மத்தியானம் வந்திருந்தார்," என்றபடியே முரளியிடம் காப்பி தம்ளரை நீட்டினாள் சுகந்தி.

கழுத்தை இறுக்கிய 'டை'யின் முடிச்சைத் தளர்த்திக் கொண்டே, "கரப்பு அரிச்ச மாதிரி தலையும் அவுட்டுச் சிரிப்புமாக இருப்பாரே - அவர்தானே? என்ன விஷயமாம்?" என்று கேட்டான்.

கணவனின் கேலியைப் பொருட்படுத்தவில்லை சுகந்தி. "அவங்க ஊருக்குப் பக்கத்திலே ஒரு அம்மன் கோயிலாம். ஆறு எலுமிச்சம்பழம் வாங்கிட்டுப் போய் அங்கே விளக்கேற்றினால் நிச்சயமாகக் குழந்தை பிறக்குமாம்..."

"சொல்லிட்டாரில்லே..? ராத்திரியே புறப்படுவோமா?"

"கேலி பண்ணாதீங்க... நமக்குக் கல்யாணமாகி மூணு வருஷமாகிறது..."

"இன்னும் ரெண்டு வருஷம் ஆனால் தான் என்ன..? நமக்குக் கட்டாயம் குழந்தை பாக்கியம் உண்டு! கவலைப்படாதே..."

"நீங்க சொல்லிடுவீங்க... கல்யாணம், விசேஷம்னு போற இடத்திலே எல்லாரும் என்னைத்தானே ஒரு மாதிரியாய் பார்க்கிறாங்க, பேசறாங்க..." சொல்லும்போதே கண்களில் நீர் முட்டியது.

அவளது திருப்திக்காக, கோயிலுக்குப் போவதென்று தீர்மானித்தான்.

கோயிலுக்கு அருகிலேயே கூடை கூடையாக எலுமிச்சம் பழங்கள். சுறுசுறுப்பான வியாபாரம்.

"என்னது! ஒரு பழம் ரெண்டு ரூபாயா? பகல் கொள்ளையாக இருக்குதே!" என்று கடைக்காரனிடம் சண்டைக்குப் போனான் முரளி.

"த பாருங்க... இஷ்டமிருந்தால் கை வையுங்க... அநாவசியப் பேச்செல்லாம் வேணாம்..."

"என்னங்க நீங்க! இவ்வளவு பணம் செலவழிச்சுக்கிட்டு வந்திருக்கோம். கேவலம் இதுக்குப் போய்க் கணக்குப் பார்க்கதீங்களே!" என்று சுகந்தி கடிந்து கொள்ளவும் முரளி அமைதியானான்.

கோயிலில் விளக்கேற்றும் போதுதான் கவனித்தாள் சுகந்தி. ஏழு பழங்கள் இருந்தன.

"ஒண்ணு அதிகப்படியாக இருக்கே. ஏது?"

முரளி சிரித்தான். "கடைக்காரன் அசந்த சமயம் பார்த்து நான்தான் அபேஸ் பண்ணினேன்... பரவாயில்லை, இதையும் சேர்த்து விளக்கேற்று!"

முரளியின் பிடிவாத சுபாவம் அறிந்தவளாதலால் ஏழு பழங்களிலும் விளக்கேற்றி அம்மனைக் கும்பிட்டாள் சுகந்தி.

நர்ஸிங்ஹோம்.

பதைபதைக்கும் மனசுடன் காத்திருந்தான் முரளி. 'கூடுதலாக ஒரு பழத்தைத் திருடி விளக்கேற்றச் சொன்னோமே... இரட்டையாகப் பிறந்து விடுமோ?'

அறைக்குள்ளிருந்து புயலாக வந்தாள் டாக்டரம்மா.

"கங்கிராட்ஸ்! பையன் பிறந்திருக்கான்... அதிர்ஷ்டசாலியாக இருப்பான்!.. காரணம் பிளஸ் ஒன்!" - வலது கைக் கட்டை விரலை உயர்த்திக் காட்டி விட்டுப் போனாள்.

குழம்பினான்.

இருபது நிமிடங்களுக்குப் பிறகே குழந்தையைப் பார்க்க முடிந்தது.

டாக்டர் சொன்னது உண்மைதான்.

குழந்தையின் வலது கையில் 'வி' போல இரண்டு கட்டை விரல்கள்!

— முகுந்தன்



# நிலத்தின் வளத்துக்கும் ஒரு நிதி நிறுவனத்துக்கும் என்ன சம்பந்தம்?





சக்தி பைனான்ஸ் — வங்கிகளுக்கு இணையான பாதுகாப்பு



பயிர் செழிக்க நல்ல விதை இருந்தால் மட்டும் போதாது. உரிய தண்ணீர் வசதி இருந்தாலும் போதாது. அது பயிரிடப்படும் நிலம் வளம் நிறைந்ததாக இருக்க வேண்டும். அந்தப் பயிருக்கேற்ற நிலமாக, சத்து நிறைந்ததாக, சிறந்த ஊட்டம் அளிக்கக் கூடியதாக இருக்க வேண்டும். நிலம் வளமாக இருந்தால் நிறைந்த அறுவடை என்பதில் விவசாயிகளுக்கு நம்பிக்கை.

சக்தி பைனான்ஸையும் மக்கள் அப்படித்தான் நம்புகிறார்கள். உங்களுடைய சேமிப்புக்கு சக்தி பைனான்ஸ் அதிக பாதுகாப்பு அளிக்கிறது. உங்கள் நலனில் அக்கறை கொண்டு உங்கள் சேமிப்புக்கு நீங்கள் அதிக வருமானம் பெற வகை செய்கிறது. சக்தி பைனான்ஸின் ஸ்திரத்தன்மையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

சக்தி நிறுவனங்களின் எண்ணிக்கை 20. மொத்த ஆண்டு வர்த்தகம் ரூ. 700 கோடி. 1.5 லட்சம் டெபாசிட்தாரர்கள் மிகுந்த நம்பிக்கையோடு வைத்திருக்கும் டெபாசிட் தொகை ரூ. 150 கோடி. நாடு முழுவதும் 37 கிளைகள். 25 சேமிப்பு மையங்கள். பரவலாகப் பாதுகாப்புப் பெட்டகங்கள்.

சக்தி பைனான்ஸ் ஒவ்வொரு வாடிக்கையாளரின் தேவையையும் பூர்த்தி செய்வதில் தனிப்பட்ட கவனம் செலுத்துகிறது. அதற்காகவே அவர்களின் தேவைகளைப் புரிந்து கொண்டு பல புதுமையான திட்டங்களை முதன் முதலாக அறிமுகப்படுத்திய சிறப்பையும் பெற்றுள்ளது.



அது மட்டுமல்ல, இத்தகைய திட்டங்களைப் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து அறிமுகப்படுத்தி விரைவாகச் செயல்படுத்துவதிலும் முன்னோடியாகத் திகழ்கிறது.

உங்கள் சேமிப்புகளை சக்தி பைனான்ஸில் டெபாசிட் செய்யுங்கள். நிம்மதி பெறுங்கள்.

**சக்தி**
**பைனான்ஸ் லிமிடெட்**

பதிவு அலுவலகம்:
475, டாக்டர் நஞ்சப்பா சாலை,
கோயம்புத்தூர்-641 018.
தொலைபேசி எண்கள்:
231471/231472/231473/231474

# நீங்கள் கேட்டவை - தராசு

● அர. மணிவண்ணன், சென்னை.

*? பூசணியை திருஷ்டிக்கு உடைத்து வீணாக்குகிறார்களே?*

! வீணாவது பூசணி மட்டுமல்ல; சாலையும்தான். பூசணிக் கூழ் ஸ்கூட்டர் மோட்டார் சைக்கிள்களின் எதிரி. கவிழ்த்து விடும். போதாக்குறைக்கு பூசணியைத் தின்ன வரும் மாடுகள் பிரேக் இன்ஸ்பெக்டர்களாகி தொல்லை தருகின்றன.

● ஆர்.கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்.

*? "கலை வடிவத்தின் மிக மோசமான வடிவம் நாடகம்" என்கிறாரே பாலகுமாரன்?*

! அது அவர் கருத்தாக இருக்கலாம்; வைத்துக் கொள்ளட்டும். ஆனால் ஷேக்ஸ்பியர், ஷா, காளிதாசன், இன்னும் சமீப கால அண்ணா, எஸ்.டி. சுந்தரம், தி. ஜானகிராமன் இவர்களை அனுபவித்தவர்கள் ஏற்க மாட்டார்கள்.

● த. ரெங்கராஜுலு, சிதம்பரம்.

*? "கமிஷன் என்பது ஜனநாயக ஆட்சியில் கண்துடைப்பு" - சரியா?*

! அது நீங்கள் எந்த கமிஷனைக் குறிப்பிடுகிறீர்கள் என்பதைப் பொறுத்தது.



● ஆர். பக், காரைக்குடி.

*? வீரப்பனைப் பிடித்துத் தருகிறேன்; எவ்வளவு அன்பளிப்புத் தருவீர்கள்?*

! கேள்வி போக வேண்டிய விலாசம் : திரு. தேவாரம், கூடுதல் டைரக்டர் ஜெனரல், தமிழக காவல் துறை.

● எஸ். கணேசன், காரைக்குடி.

*? நடிகர்கள், அரசியல் தலைவர்கள் ஆர்ப்பாட்டமாக வருஷா வருஷம் பிறந்த நாள் கொண்டாடுவது ஏன்?*

! மக்கள் தங்களை மறந்து விடக் கூடாதே என்ற கவலைதான்.

● முத்துவேணி அரசு, பாம்பன்குளம்.

*? ஜெயின் மந்திரி சபையில் அவர் காலில் விழாத அமைச்சர்கள் பட்டியலைத் தர முடியுமா? (சமீபத்தில் கே.ஏ.கே.யும் ஆர்.எம். வீயும் விழுந்தாயிற்று.)*

! என்னாலான உதவி நீங்கள் தந்த தகவலைப் பிரசுரித்து விட்டேன். இன்னும் காலில் விழாத ஒருவரும் விழுந்து வைக்கட்டும். இல்லாவிட்டால் பதவி பறிபோய் விடலாம். பாவம்!

● ஸ்ரீநிவாஸ் பிரபு, சென்னை.

*? "புரட்சித் தலைவியின் முழக்கம்" புத்தகத்தைத் தலா ரூ. 25,000 கொடுத்து அமைச்சர்கள் பெற்றுக் கொண்டிருக்கிறார்களே, வியப்பாயில்லை?*

! வியப்பதற்கு ஒன்றுமில்லை. பதவியைத் தக்க வைத்துக் கொள்ள அவ்வப்போது செலுத்தும் கப்பம் அவ்வளவுதான். இத்தகைய வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தருவதற்காக அமைச்சர்கள் அம்மையாருக்கு நன்றி செலுத்த வேண்டும்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? "எந்த வேட்பாளரையும் பிடிக்காவிட்டால் வாக்குச் சீட்டில் விரும்பும் நபரின் பெயரை எழுதும் முறை வர வேண்டும்" என்கிறாரே சேஷன்?*

! சேஷன் எப்போதுமே ஆக்கபூர்வமான கருத்துக்களைத் தான் சொல்வார் என்பதில்லை. அவருடைய உருப்படாத யோசனைகளில் ஒன்று இது.

● தெ. கு. திலீபன், வத்ராயிருப்பு.

*? ஏர்-இந்தியா விமானத்தில் பறக்கும்போதே பிரமுகர்கள் முன்னிலையில் நடந்த திருமணம் பற்றி...?*

! கின்னஸ் புத்தகத்தில் இடம்பெற உதவலாம். ஆனால் நாகரிகமாகத் தோன்றவில்லை. பணம் அபரிமிதமாக இருந்தால் ஊர் நலனுக்கு செலவிட வேண்டும்; ஊதாரித்தனமாக அல்ல.

● என்.கே. ஈசுவரி, பெங்களூர்.

*? இந்தியா தங்கம் வென்றுள்ளதே; இப்போ என்ன சொல்வீங்க?*

! வென்ற வரை மனப்பூர்வமான வாழ்த்துக்கள். ஆனால் இம்மாம்பெரிய தேசத்துக்கு நாலே நாலு தங்க மெடல் காணாதுங்க. நாலு, குறைந்தபட்சம் நாற்பதாக உயரப் பாடுபடணும்.

● எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

*? புதிதாக ஆறு நீதிபதிகள் நியமிக்கப்பட்டிருப்பது குறித்து?*

! இனியாவது தேங்கிக் கிடக்கும் வழக்குகளின் எண்

• இன்னொரு ரேணுகா?

# 'ஜெ' காலில் விழாத அமைச்சர்கள் உண்டா?



• சமீபத்தில்...



• ...விருந்தவர்கள்?



• ரூ. 50 கோடி லாபம்



• கோவிக்கப்பார்?!




ணிக்கை குறைந்து வந்தால் சரி.

● **பி. ராஜசேகரன், மதுரை.**

*? பிளேக் நோய் உணர்த்தும் பாடம் என்ன?*

! வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்.

● **எஸ். சங்கரநாராயணன், சென்னை.**

*? சென்னை நகருக்கு "ஜெயா நகர்" என்று பெயர் சூட்டப்படும் என்று பேசப்படுகிறதே?*

! அவ்வளவு எதுக்குங்க? சென்னையை "ஜென்னை" என்று அழைத்தால் தீர்ந்தது!

● **மு. இரவிசந்திரன், சேலம்.**

*? ஜெயப்பிரதா இன்னொரு ரேணுகா ஆவாரா?*

! ஏன், இன்னொரு 'ஜெ' ஆகக் கூடாதா?

● **கு. நாகராஜன், குருசாமிபாளையம்.**

*? நிலக்கரி இறக்குமதியால் ரூ. 50 கோடி லாபம் கிடைக்கு மென அமைச்சர் கண்ணப்பன் கூறியுள்ளாரே?*

! யாருக்கு?

● **ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.**

*? குபேர நாடான அமெரிக்காவில் நாலு கோடி பேருக்கு மேல் வறுமையில் வாடுகிறார்களாமே?*

! அவர்களுடைய வறுமையின் அளவுகோலே வேறு. தவிர, வறுமைக் கோட்டுக்குக் கீழ் உள்ளவர்களின் சதவிதக் கணக்கும் நம் தேசத்தை ஒப்புநோக்க ரொம்பக் குறைவு.

● **எஸ். குமார், காரைக்குடி.**

*? இந்த மூன்று வருடங்களில், தாம் ஒரு நடிகை என்பதை நம் முதல்வர் எங்காவது காண்பித்திருக்கிறாரா?*

! ஏன் இல்லை? பல்வேறு ஊர்களுக்குச் சென்று நலத் திட்டங்கள் அறிவிக்கும் போதெல்லாம் வேறு என்ன செய்கிறார் என்று எண்ணுகிறீர்கள்?

● **எம். சங்கர், திருமங்கலம்.** ❑

*? சென்னை கோட்டையில் ஜெயலலிதா கார் நிறுத்த ரூ. மூன்று லட்சத்தில் ஷெட் அமைக்கப் போகிறார்களாமே?*

! என்னங்க நீங்க, இதுக்கே இப்படிக் குறைபட்டுக்கிட்டா, நாளைக்கு முப்பது லட்சம் செலவழித்து ஹெலிகாப்டருக்கு ஷெட்டும் முன்னூறு லட்சம் செலவில் தனி விமானத்துக்கு ஷெட்டும் கட்டும் போது என்னதான் சொல்லுவீங்களோ!

● **என். எம். கிருஷ்ணா, சிதம்பரம்.**

*? "ஒன்றுமில்லாததற்கு ஏகப்பட்ட ஆர்ப்பாட்டம்". இந்த ஷேக்ஸ்பியர் நாடகத் தலைப்பு சமீபத்திய எந்தத் திரைப்படத்துக்குப் பொருந்தும்? கண்டுபிடிக்க பார்க்கலாம்!*

! வேணாங்க, மீசைக்காரர் கோவிச்சுக்குவார்!

**❑ ரூ 25 பரிசு பெறுபவர் :**
**எம். சங்கர்,**
**4-ஏ, அண்ணா நகர் முதல் தெரு,**
**திருமங்கலம் - 626 706.**

• உருப்படாத யோசனை



• அவர் கருத்து



